# மாணவர் செந்தமிழ் வாசகம்

மூன்றும் படிவம்

பொதுப் பகுதி



வெளியிடுவோர்

ர்மேகக்கோன்

மதுரை

# மாணவர் செந்தமிழ் வாசகம்

## மூன்றும் படிவம்

### பொதுப் பகுதி

(Form III — Part I)

★



ஆசிரியர் :
ரா. கிருஷ்ணமூர்த்தி, எம். ஏ., எல். டி., பி. ஓ. எல்.,
தமிழ்த்துறைத் தலைவர், மதுரைக் கல்லூரி,
மதுரை.

பதிப்பாசிரியர் :
ஆ. கார்மேகக் கோன்,
முன்னுள் தமிழ்ப் பேராசிரியர், அமெரிக்கன் கல்லூரி,
மதுரை.

★



வெளியிடுவோர் :
ஆ. கார்மேகக் கோன்,
தல்லாகுளம் :: மதுரை - 2.

 1964 [விலை ரூ. 1—00

மூன்றாம் பதிப்பு—1957
நான்காம் பதிப்பு-1959
ஐந்தாம் பதிப்பு—1960
ஆறாம் பதிப்பு — 1963
ஏழாம் பதிப்பு — 1964



Approved by the T. B. C. Madras. Fort St. George Gazette.
Page 24 Dated 10—5—1961
Printed on D/cr white printing paper—11.2 Kg.




Printed at Vijaya Printers, Madurai-1964.

# முகவுரை



மாணவர் செந்தமிழ் வாசகம் என்னும் வாசக வரிசையில், இது மூன்றும் படிவப் பொதுப் பகுதியாகும். இது 26—6—1952இல் அரசாங்கக் கல்வி இலாகா வெளியிட்ட புதுப் பாடத்திட்டத்தின்படியே எழுதப் பெற்றுள்ளது. அத்திட்டத்தில் குறிப்பிட்டுள்ள எல்லா முறைகளையும் நன்கு கவனித்துப் பாடங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. மாணவர்கள் பல துறைகளிலும் அறிவுபெறுதற் பொருட்டு இலக்கியம், பெரியோர் வாழ்க்கை, சரிதம், கலை, நாடகம், உரையாடல், வன விலங்கு, இயற்கை விநோதம், சிறு கதை முதலிய பல பொருள்கள் பற்றிய பாடங்கள் இவ் வாசகத்தில் அமைந்துள்ளன.

பாடங்களின் முடிவில் வினாக்களும், பயிற்சிகளும், அருஞ் சொற் பொருட் குறிப்பும் இலக்கணக் குறிப்பும் கொடுக்கப்பட்டுள்ளன. மாணவர்களுக்கு மொழி அறிவும், நல்ல உரை நடைப் பழக்கமும் உண்டாவதற்கு ஏற்றவாறு இனிய, எளிய, சொற்களும் தொடர்களும் அமைந்த நடை, இப்புத்தகத்தில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

இப்புத்தகத்தை நன்கு பார்வையிட்டு வெளியிட முன் வந்த பேராசிரியர் திரு. ஆ. கார்மேகக் கோனார் அவர்கட்கு என்று நன்றி உரியதாகும்.

நன்முறையில் வெளி வந்துள்ள இவ்வாசகத்தைத் தத்தம் பள்ளிகளில் பாடப்புத்தகமாக அமைத்துப் பயன் படுத்துமாறு ஆசிரியப் பெரியோர்களை அன்புடன் வேண்டிக்கொள்கின்றேன்.

*R. கிருஷ்ணமூர்த்தி.*

## மூன்றும் படிவம் — பொதுப் பகுதி

# பொருள் அடக்கம்

## செய்யுட் பகுதி

I. வாழ்த்து

1. பாரதியார் பாடல்
2. சகல கலாவல்லி மாலை
3. கம்பராமாயணம் (கடவுள் வாழ்த்து)
4. இராமலிங்க சுவாமிகள் பாடல்

II. அறவுரை

1. திருக்குறள்
2. நாலடியார்
3. சிறுபஞ்சமூலம்
4. சதகம்

III. கதை

1. நளன் சரிதம் (நைடதம்)

IV. பல்சுவை

1. திருக்குறளின் பெருமை
2. பயனற்றவை இவை
3. திருமண விருந்து
4. உண்மைப் பெருமை எது?

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா.
தவசுப நாமே ஜாகே,
தவசுப ஆசிஷ மாங்கே,
காயே தவ ஜய காதா.
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய, ஜயஹே!

— ரவீந்திரநாத தாகூர்.

---

# தேசீய கீதம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி
செலுத்துகிறாய்
நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஓரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப்
பாடுகின்றன;
இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

---

# மாணவர் செந்தமிழ் வாசகம்

## மூன்றும் படிவம்

### பொதுப் பகுதி

## 1. கோவூர் கிழார்

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் சோழ வள நாட்டில் கோவூர் என்னும் ஊரின்கண் வேளாளர் குலத்தில் கோவூர் கிழார் என்னும் இப் பெரியார் தோன்றினார். அவர் இளமையிலேயே தக்க ஆசிரியரை அடைந்து, நன் மாணுக்கருக்குள்ள நல்லியல்புகளோடு, அவரை வழிபட்டு, மடி, மறதி முதலிய குற்றங்கள் இன்றிப் பல நூல்களையும் பிழையறக் கற்ருர். அதனுல் அவருக்குச் சிறப்பாகச் செய்யுளியற்றும் ஆற்றல் அப்பொழுதே உண்டாயிற்று. அது மட்டுமின்றி அவர் உலகியலறிவையும் அரசியலறிவையும் சாலவும் பெற்றிருந்தார். ஆதலால், 'அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்' என்றபடி, முடியுடை வேந்தர்களும் அவரது புலமையைப் போற்றி நன்கு மதிப்பாராயினர்.

அக்காலத்தில் சோழ நாட்டின் ஒரு பகுதியைச் சோழன் நலங்கிள்ளி என்பவன் அரசாண்டு வந்தான். அவன் இவரது அறிவாற்றல்களைக் கேள்வியுற்று, இவ

ரைக் காண வேணவாக் கொண்டு, தன் அரண்மனைக்கு அழைத்தான். புலவரும் அங்ஙனமே சென்று அவனது வீரம், ஈகை முதலிய அரும்பெரும் பண்புகளை அறிந்து அவனுடன் நட்புறவு கொண்டு ஒழுகி வந்தார்; அவனைப் பல பாடல்களால் புகழ்ந்து பாராட்டினர்.

அவ்வமயத்தில் நலங்கிள்ளியின் தாயத்தவனாகிய நெடுங்கிள்ளி என்பவன் சோழ நாட்டின் மற்றொரு பகுதியை ஆண்டு வந்தான். அவன் சோழ நாடு முழுவதையும் தனக்கு உரிமையாக்க விரும்பி, நலங்கிள்ளியின் மேல் போர் தொடுக்கலானான். அப்போரில் நெடுங்கிள்ளி தோற்று ஆவூர்க் கோட்டைக்குள் ஓடி ஒளிந்து கொண்டான். உடனே நலங்கிள்ளி அக்கோட்டையையும் பிடிக்க அதனை முற்றுகையிட்டான். நெடுங்கிள்ளி அவனோடு எதிர்த்துப் போர் செய்யும் ஆற்றல் இல்லாது கோட்டைக் கதவினை அடைத்துக்கொண்டு உள்ளே வாளா இருந்தான். அதனால் முற்றுகை நீட்டித்து, உள்ளே இருந்த மக்களும் மற்ற உயிர்களும் உணவும் நீரும் இன்றிப் பசியால் வாடி வருந்த நேரிட்டது.

இந்த நிலைமையில் நம் கோவூர் கிழார், அருள் மிக்கவராதலால், அவ்வுயிர்களுக்கு நேர்ந்த இன்னலுக்கு இரங்கினர்; எப்படியும் கோட்டைக் கதவினைத் திறக்கச் செய்ய வேண்டுமென்று உள்ளத்தில் உறுதிகொண்டார். உடனே அவர் கோட்டைக்குள் இருந்த நெடுங்கிள்ளியை அணுகி, "மன்ன, உனது யானைகள் நீரின்மையால் குளிக்காமலும் உணவின்மையால் உண்ணாமலும் துன்புற்று இடி போல முழங்கித் தம் கைகளை நிலத்தின்

மீது புரட்டிப் பெருமூச்சு விட்டு வருந்துகின்றன; குழந்தைகள் பால் இல்லாமையால் அழுகின்றன; பெண்டிர் பூக்களை யணியாது பொலிவற்றிருக்கின்றனர்; குடிகள் குடிக்க நீரின்மையால் கூக்குரலிடுகின்றனர்; இந்நிலையில் நீ இரக்கமும் நாணமும் இன்றி இங்கே வாளா இருத்தல் மிகவும் கொடியது. நீ அறத்தைக் கருதினை யாகில், கோட்டைக் கதவை உன் தாயத்தவனுக்குத் திறந்து விடு; மறத்தைக் கருதினையாகில் வீரத்துடன் போர் செய்து அவனை வென்று விரைவில் கதவைத் திற; இரண்டுமின்றிக் கதவை யடைத்துக் கொண்டு உள்ளே இருப்பது மிகவும் "நாணத்தைத் தருவதாகும்" என்று அவன் மனங் கொள்ளுமாறு அறிவுரை பகர்ந்தார் இதைக் கேட்ட நெடுங்கிள்ளி மனம் மாறிக் கோட்டைக் கதவைத் திறந்துவிட்டு, உறையூர்க் கோட்டைக்குச் சென்று கதவை யடைத்துக் கொண்டு உள்ளே இருந்தான்.

பிறகு நலங்கிள்ளி ஆவூர்க் கோட்டையைக் கைப் பற்றி அதில் இருந்து வந்தான். அக் காலை, அவனிடம் **இளந்தத்தன்** என்னும் புலவர் ஒருவர் வந்து பரிசில் வேண்டிப் பெற்றுக்கொண்டு, பின்னர் உறையூரிலிருந்த நெடுங்கிள்ளியிடமும் பரிசில் பெறக் கருதிச் சென்றார். அவரைக் கண்ணுற்ற நெடுங்கள்ளி, "இவன் நம் பகைவனாகிய நலங்கிள்ளியிடமிருந்து வந்த ஒற்றனாதல் வேண்டும்; உண்மைப் பரிசிலன் அல்லன்," என்று எண்ணி அப்புலவரைக் கொல்லக் கருதிச் சிறை செய்து வைத்திருந்தான்.

இதனைக் கோவூர்கிழார் கேள்வியுற்று இளந்தத்தனை உயிரிறுதியின்று தப்புவிக்கக் கருதி உறையூருக்கு ஓடோடியும் வந்தார்; அரசனைக் கண்டார்; அவனை நோக்கி, "அரசே! இப்புலவர் ஒற்றரல்லர்; வஞ்சமற்ற நெஞ்சையுடைய பரிசிலரே யாவார்; அவர் வாழ்க்கை, வள்ளல்களை உள்ளிப் பழுமரம் தேரும் பறவை போல, நெடுந்தூரம் அரிய வழிகளைக் கடந்து சென்று, தம் நாவால் இயன்றவாறு பாடிப்பெற்ற பரிசிலால் மகிழ்ந்து, தம் சுற்றத்தை அதனால் அருத்தி, இனிதாக ஒழுகுவதன்றிக் கொடுமை செய்தலை யறியாது; அன்றியும் புலவரது வாழ்க்கை, உம் போன்றவர்களுக்குரிய பெருமிதமும் உடையது," என்று கூறினார். இதனைக் கேட்ட அரசன் தன் கொடுஞ் செயலுக்கு வெட்கிப், புலவரைக் கொல்லாது சிறை வீடு செய்தான், இங்ஙனம் கோவூர் கிழார் இளந்தத்தனை உய்வித்தார்.

பிறகு கோவூர் கிழார் உறையூரிலேயே சின்னாள் தங்கியிருந்தார். அப்போது நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி உறைந்திருந்த உறையூர்க் கோட்டைமீதும் படையெடுத்து வந்து அதனை முற்றுகையிட்டான் ஒரு குடிப் பிறந்த இரு மன்னரது இத்தகைய தீராப் பகைமையைத் தீர்க்கக் கருதி தம் கோவூர் கிழார், அவ்விருவரையும் நோக்கி, "அரசர்களே! நீவிர் இருவரும் சோழர் குடியிற் பிறந்தவர்களே; இருவருள் ஒருவரேனும் சேரனோ பாண்டியனோ அல்ல; ஆகவே உங்களுள் எவர் தோற்றாலும் தோற்பது சோழர் குடியேயன்றி வேறொரு குடியன்று; இருவரும் வெல்லுதல் என்பதும் இயலாது. இச் செய்கையால் உங்கள் குடிக்குச் சிறுமையே யன்றிப்

பெருமையில்லை; இது உங்கள் பகைவர்க்கும் நகைபபுக் கிடமாகும்; இப்போரை விட்டொழிப்பதே தக்கதாகும்.'' என்று கூறினர். இவ்வறிவுரை இருவர் நெஞ்சிலும் பசுமரத்தாணிபோல் பதிந்தது. அதனல் இருவரும் தம் தவறுணர்ந்து, போரொழிந்துஅன்பு பூண்டு வாழ்வா ராயினர்.

கோவூர் கிழாரது அருளுள்ளத்தையும் பெருங் குணங்களையும் நன்குணர்ந்த நலங்கிள்ளி அன்றுமுதல் அவருடன் நெருங்கிய நட்பும் மதிப்பும் கொண்டு ஒழுகி வந்தான்; அவரது துணையால் தமிழறிவு சிறக்கப் பெற்றுப் பாக்கள் இயற்றும் புலமை யுடையவனுனன்.

அக்காலையில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் என் பான், திருக்கோவலூரிலிருந்த மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளலோடு பகைமை கொண்டிருந்தான். ஆதலால் அவன் காரியினது இரு குழந்தைகளை எப்ப டியோ கைப்பற்றிக் கொணர்ந்து யானைக் காலால் இட றும்படி செய்து கொல்லக் கருதினன். இதனை யறிந்த கோவூர் கிழார் அச் சிறுவர்களைக் காப்பதற்குக் காவிரிப் பூம்பட்டினத்திற்கு விரைந்தார்; கிள்ளிவளவன் அக் குழந்தைகளைக் யானைக் காலால் இடறுவிக்கச் சித்தமாக இருக்கும் காட்சியைக் கண்டார். "அரசே, நீயோ ஒரு புறுவின் பொருட்டுத் தன் உடலையே கொடுத்த சிபி என் னும் பேரரசன் மரபில் தோன்றியவன்; இவர்களோ இரவலரைப் பாதுகாக்கும் பெரியோன் காரியின் மக்கள்; இவர்கள் இந்த யானையைக் கண்டு அஞ்சி அழுவதையும் மறந்து நிற்கும் இளஞ் சேய்களாய் உள்ளனர்;

அன்றியும் இக்கூட்டத்தைக் கண்டு அஞ்சி நிற்கின்றனர். நான் கூறிய இச் சொற்களை நீ உணர்ந்தாயாகில், இனி நீ விரும்பியவாறு செய்க,'' என்று மனமிரங்குமாறு மொழிந்தார். இச்சொற்களைக் கேட்ட வளவன் தன் கொடுஞ் செயலுக்கு நாணிக் குழந்தைகளைக் கொல்லாது விடுத்தான். பின்னர் கிள்ளிவளவனின் கொடை, வீரம், முதலிய உயர் குணங்களை உணர்ந்து கோவூர் கிழார் அவனைப் பாராட்டிப் பாடினார். அவர் மீண்டும் உறை யூருக்கு வந்து நலங் கிள்ளியுடன் உறைந்து இன்புற்றிருந்தார்.

பழங்காலப் புலவர்கள் அரசரால் மதிக்கப்படும் தன்மையும், அவர்களுக்கு இடித்துக் கூறும் வன்மையும் பெற்று அருள் நிறைந்த உள்ளத்தாராய் வாழ்ந்து வந்தனர் என்பதற்குக் கோவூர் கிழாரது வாழ்க்கை ஒரு எடுத்துக் காட்டாக விளங்குகிறது. அக் காலத்தில் புலவர்கள் அரசரினும் அதிகமாக மதிக்கப்பட்டார்கள் என்றும் நாம் அறிகிறோம்.

## கேள்விகள்

1. நெடுங்கிள்ளி நலங்கிள்ளி மீது ஏன் போர் தொடுத்தான்?
2. நலங்கிள்ளி ஆவூரை முற்றுகையிட்டதால் என்ன நேர்ந்தது?
3. நெடுங்கிள்ளி இளந்தத்தனைக் கொல்லக் கருதியது ஏன்?
4. கோவூர்கிழார் இளந்தத்தனை எங்ஙனம் உய்வித்தார்?
5. நெடுங்கிள்ளிக்கும் நலங்கிள்ளிக்கும் இருந்த பகைமையைக் கோவூர்கிழார் எப்படித் தீர்த்துவைத்தார்?
6. மலையமானின் மக்களைக் கொல்ல எண்ணிய கிள்ளி வளவனுக்குக் கோவூர்கிழார் கூறிய அறிவுரை யாது?

7. பழங்காலப் புலவர்களின் வாழ்க்கையும் தன்மையும் எத்தகையன?

## பயிற்சி

1. கோடிட்ட இடங்களை நிரப்புக:

நெடுங்கிள்ளி————கருதி நலங்கிள்ளி மேல் போர் தொடுத்தான். நெடுங்கிள்ளி போரில் தோற்று———— கோட்டைக்குள் ஒளிந்து கொண்டான். நலங்கிள்ளி ஆவூரை முற்றுகை இட்டதால்————கோவூர் கிழார் அடைத்திருந்த மதிலுக்குள் இருந்த————கண்டு மதிற் கதவை————நெடுங்கிள்ளி என்னும் புலவரை———— என்று கருதிக் கொல்லத் துணிந்தான். கிள்ளிவளவன்——— மக்களைக் கொல்லக் கருதினன்.

2. சொந்த வாக்கியங்களில் அமைக்க:—

மனங்கொள்ளுமாறு, பசுமரத்தாணிபோல், வழிபடுதல், உலகியலறிவு, அறிவாற்றல்கள், வேணவா, நட்புறவு, வாளா இருத்தல், அறிவுரை, உயிரிறுதி, பெருமிதம், சிறை வீடு.

## அருஞ்சொற் பொருள்

முடியுடைவேந்தர் — சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர்; வேணவா — மிக்க அவா (விருப்பம்); தாயத்தவன் — பங்காளி; இன்னல் — துன்பம்; மறம் — வீரம்; பொலிவு—அழகு; ஒற்றன் — துப்பறிபவன்; தேரும்—நாடிச் செல்லும்; அருத்தி—உண்பித்து; சிறைவீடு—சிறையினின்றும் விடுவித்தல்; உய்வித்தல்—காப்பாற்றுதல்; இடித்துக் கூறுதல் — வற்புறுத்தி அறிவு புகட்டுதல்; உயிரிறுதி—மரணம்; செய் — குழந்தை.

---

# 3. மூன்று கேள்விகள்

முற்காலத்தில் இங்கிலாந்து தேசத்தை ஓர் அரசன் ஆண்டுவந்தான். அப்போது அத்தேசத்தில் ஒரு பெருஞ் செல்வர் கற்றறிந்து நல்லொழுக்கம் உடையவராய் மக்களிடத்து அன்பும் அருளும் காட்டி நற்குடி மகனுக வாழ்ந்து வந்தார். அவர் தம் செல்வம் முழுவதையும் பிறருக்கே செலவிட்டு அவர்களோடு அளவளாவிப் பெரும் புகழ் பெற்று விளங்கினர்.

அவருடைய புகழைப்பற்றிக் கேள்வியுற்ற அரசன், தன் புகழினும் அவர் புகழ் மிகுந்து பரவத் தலைப்பட்டமையால், அவர்மீது அழுக்காறு கொண்டான்; அதனுல் அவரைக் கொன்றுவிடவும் துணிந்தான். ஒருநாள் அரசன் அப்பெரியாரைத் தன்அரண்மனைக்கு அழைத்தான். அவர் வந்தவுடன் அரசன் அவரை நோக்கி, "நீர் பெருஞ் செல்வத்துடன் வாழ்ந்து வருவதாகக் கேள்வியுற்றேன். உமக்கு அத்துணைச் செல்வம் எப்படிக் கிடைத்தது? அரசருக்குச் செலுத்தவேண்டிய இறைப் பணம் அனைத்தும் நீர் தவருது செலுத்தியிருப்பீரோ என நான் ஐயுறுகின்றேன். அவ்வாறு செலுத்தியிருந்தால் இவ்வளவு செல்வம் உம்மிடம் எப்படித் திரண்டிருக்க முடியும்? நீர் என்னை வஞ்சித்தே இப் பெருஞ் செல்வத்தை ஈட்டியிருக்க வேண்டும். எனவே நீர் இராசத் துரோகச் செயல் செய்திருக்கிறீர். இக் குற்றத்திற்காக உம்மைத் தண்டிக்கப் போகிறேன். இராசத் துரோகக் குற்றத்திற்கு மரண தண்டனைதான் விதிக்க

வேண்டும் என்பது சட்டம். ஆகவே சட்டப்படி உம் உயிர் இன்னும் சில நாட்களில் நீங்கவிருக்கிறது,'' என்றான்.

செல்வர் அதைக் கேட்டு, "அரசே, யான் ஒரு குற்றமும் செய்யவில்லை. என் செல்வமனைத்தும் நீதியான நெறியில் வந்ததே, ஒருவரையும் வஞ்சித்தும் ஏமாற்றியும் நான் அதைப் பெறவில்லை. தங்களுக்குக் கொடுக்க வேண்டிய இறைகளை ஒழுங்காகச் செலுத்தி வந்திருக்கிறேன்; அதற்கான பற்றுச் சீட்டுகளும் என்னிடம் உள்ளன; தாங்கள் என்னைப்பற்றி நினைப்பது தவறு. என் உயிரை எடுத்துக்கொள்ளத் தங்களுக்கு எப்பொழுதும் உரிமை உண்டு. ஆனால் அதற்குத் தக்க காரணம் வேண்டாமா? நான் சாவதற்கு அஞ்சியதாக எண்ண வேண்டா,'' என்று விடை இறுத்தார்.

அதனைச் செவியுற்ற அரசன் மீண்டும், "நீர் பலவாறு மக்களுடன் இச்சகம் பேசி அவர்களை உமது வலையில் அகப்படுத்தி, அவர்கள் உதவியால் அரச பதவியை யடைய எண்ணியிருக்கிறீர். உமது சூழ்ச்சித் திறன் எனக்குப் புலனாகிவிட்டது. ஆகையால் இனி உம்மை நான் சிறிது காலமும் உயிருடனிருக்க விடேன்,'' என்று சினந்து கூறினான்.

அதற்குச் செல்வர், "அரசே, நான் புரிந்த குற்றம் யாது என்று தெளிய விசாரியாமல் ஒருமுகமாகத் தாங்களே என்மீது குற்றம் சாட்டி, தண்டனையும் விதிக்கத் துணித்த செய்கையை யான் என்னவென்று சொல்வது? அரச நீதி என்று ஒன்றிருப்பது தாங்கள் அறியாததல்லவே?'' என்றார்.

எனினும் அரசன் மனம் திரும்பாது கடுஞ்சினமே கொண்டான். பிறகு, "என் செய்கையைக் குறித்துத் தீர்ப்புச் சொல்ல முற்பட்ட உமக்கு நான் விதித்த தண்டனையை நிறைவேற்றியே தீருவேன். நீர் பொறுமைக்காரர், பேராசை கொண்டவர், பதவிவெறிபிடித்தவர் என்பதில் எனக்கு எட்டுணையும் ஐயமில்லை. எனினும் உமக்கு நான் ஒரு சோதனை யளிக்கிறேன். அதில் நீர் வெற்றிபெற்றால், தண்டனையிலிருந்து தப்பமுடியும். அச் சோதனை யாதெனின், நான் கேட்கும் மூன்று கேள்விகளுக்கு நீர் தக்க விடையளிக்கவேண்டும். அவை என்னவெனில், நான் இன்னும் எத்தனைக் காலம் உயிரோடிருப்பேன்? நான் உலகத்தைச் சுற்றி ஒருமுறை வர எத்தனை நாள் ஆகும்? நான் இப்பொழுது என் மனதில் என்ன எண்ணிக்கொண்டிருக்கிறேன்? என்ற இம் மூன்றுமே இவற்றுக்கு நீர் பதினைந்து நாட்களில் விடையளிக்க வேண்டும். இல்லையேல் மரணம் உறுதி," என்றான்.

இதைக் கேட்ட அறிஞராகிய அச் செல்வர், "இக் கேள்விகளுக்கு என்னால் விடையளிக்க முடியுமா என்பது ஐயமே, எனினும் முயன்று பார்ப்பேன். என் உயிர் மீதுள்ள ஆசையால் நான் இக் கேள்விகளுக்கு விடை காண முயல்வதாகத் தாங்கள் நினைக்கவேண்டா. என் அறிவிற்கு இவை சோதனை என்றெண்ணியே நான் இதனை மேற்கொள்கிறேன்," என்று கூறி விடை பெற்றுச் சென்றார்.

சென்றவர், அக் கேள்விகளுக்குச் சில நாட்கள் வரை விடையைச் சிந்தித்துப் பார்த்து அறியாதவராய்த் தன்னிலும் அதிகம் கற்ற புலவர்களை நாடினார்.

நாட்டில் இருந்த அறிஞர் ஒருவரும் அவற்றிற்கு விடை காண முடியவில்லை. எனவே அச் செல்வர் வருத்தத் துடன் தன் மனைவி மக்களிடம் விடைபெற்றுக் குறித்த தவணை முடியுமுன் அரசனைக் காணச் சென்றார். செல் லும் வழியில் அவருடைய பண்ணையில் வேலை செய்யும் பணியாள் ஒருவன் அவருக்கு எதிர்ப்பட்டான். முகம் பொலிவிழந்து, தலைசாய்ந்து, வருத்த மிகுதியுடன் இருந்த அவரைக் கண்டதும் அவன் வணங்கி, "பெரியோரே, தாங்கள் ஏன் இன்று வாட்டமுற்று இருக் கின்றீர்? தங்களை இந்த நிலையில் நான் ஒரு போதும் கண்டதில்லையே. தங்களுக்கு யாதுற்றது?" என்று வினவினான்.

அதற்கு அப்பெரியார், "நான் ஒரு சிறு சோதனை யில் வெற்றி பெற இயலாது வருந்துகிறேன். என் உயிர் இன்னும் சில மணி நேரத்தில் நீங்கவிருக்கிறது," என்று விடை பகர்ந்தார். "ஆ! அத்துணைப் பேராபத் திலா தாங்கள் அகப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்? அது எங்ஙனம் நேர்ந்தது என எனக்கு விரிவாக உரைப்பீரா யின், என்னால் கூடுமாயின் தங்களைக் காப்பாற்றுவேன்! இல்லையானால் தங்களுக்காக நானே சாவேன்" என்று அப்பணியாள் பரிவுடன் உரைத்தான். உடனே பெரியார் நிகழ்ந்ததெல்லாம் கூறி, "நீ வருந்தற்க. விதிப்படி எல் லாம் நிகழும். நீங்கவிருக்கும் உயிரை யார்தான் தடுக்க வல்லார்?" என்று ஆறுதல் மொழி புகன்றார். எனினும் அப்பணியாள், பெரியாரே. நான் எங்ஙனமேனும் தங் களைக் காப்பாற்ற இயலுமென்று கருதுகிறேன். எனக்கு ஒரு வாய்ப்பு அளியுங்கள். தங்கள் உடையையும் பரியை யும் எனக்குச் சற்றே கொடுத்துதவினால், யான் தங்களைப் போல உடையணிந்து தங்கள் பரிமேல் ஏறி

விரைந்து சென்று அரசரைக் கண்டு வருவேன்'' என்ருன்.

இதனைக் கேட்ட செல்வர் அவன் விரும்பியபடியே அவனுக்குத் தனது உடையையும் பரியையும் கொடுத்தனுப்பினர். பணியாள் மாறுவேடத்துடன் அரசவைக்குச் சென்ருன். அரசன் அவனை வரவேற்று, "செல்வரே! என் கேள்விக்கு விடைகொண்டு வந்திருக்கிறீரா? அல்லது சாகத் துணிந்து வந்திருக்கிறீரா?'' என்று வினவினன். அதற்கு அப்பணியாள், "அரசே, தங்கள் வினக்களுக்கு விடைகளையே பகர வந்துள்ளேன்,'' என்று பணிவாகக் கூறினன். "ஆயின் விடை பகர்க'' என்று அரசன் கூறலும், அவன், "தங்கள் முதல்கேள்வி, தாங்கள் எத்துணைக் காலம் உயிருடன் இருப்பீர்கள் என்பதல்லவா? அதற்கு எனது விடையாவது, தாங்கள் சாகும் வரையில் உயிருடன் இருப்பீர்கள், என்பது. இரண்டாவது கேள்விக்கு விடை யாதெனில், தாங்கள் பகலவனைப் பின்தொடர்ந்து சென்ருல் உலகத்தை ஒரே நாளில் சுற்றி வந்துவிடலாம், என்பது, மூன்ருவது வினவிற்கு விடை, நான் தங்கள் பகைவனகிய செல்வர் என்று தாங்கள் இப்பொழுது நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள், என்பது. என்ன அரசே! என் விடைகள் தவறில்லையே?'' என்று கூறி முடித்தான்.

இவ்விடைகளைக் கேட்ட அரசனுக்கு ஒருபுறம் கடுப்பும் மற்ருெரு புறம் வியப்பும் உண்டாயின. "இவன் நம் கேள்விகளுக்கெல்லாம் மறுக்கமுடியாத விடைகளையன்ருே அளித்துவிட்டான். நான் இனி இவனை எக்காரணத்தால் கொல்வது?'' என்று அரசன் யோசித்தவண்ணம்

தயங்கி நின்றான். அதைக்கண்ட பணியாள், "அரசே, ஏன் தயங்குகிறீர்கள்? என் விடைகள் தவறு? நான் சோதனையில் தோற்றுவிட்டேனு?'' என்று கேட்கவும், அரசன் வெட்கித் தலைகுனிந்து நின்றான்.

பிறகு பணியாள், "அரசே, தங்களது நெறியற்ற செயலை உணர்ந்து இனியேனும் திருந்துங்கள். யான் தங்கள் பகைவனுகத் தங்களால் கருதப்படும் செல்வர் அல்லன்; ஓர் ஏழைப் பணியாள் தான். அச்செல்வர் எல்லாரிடத்தும் கொண்டிருக்கும் பேரன்பையும் அவரது பெருங் குணத்தையும் அறியாது தாங்கள் அவர்மீது நீதியின்றிக் குற்றம் சாட்டினீர்கள். அவரை இனியேனும் பகைவராகக் கருதாது, தங்கள் நண்பராகக் கொண்டு வாழ்வதுதான் தங்களுக்கு உறுதி பயக்கும். இதுவே எனது வேண்டுகோள்,'' என்றான்.

அரசன் தன் தவறினை உணர்ந்து, "அறிவிற்சிறந்த அவரைச் சோதிக்க எண்ணிய நான் அவமானமடைந்தேன். என் கேள்விகளுக்கு ஒருவராலும் தக்க விடையளிக்கமுடியாது என்று கருதியே என் செருக்கடங்கிற்று. "சில கற்றார் கண்ணும் உளவாம் பல கற்றார்க்கு அச்சாணி யன்ன தோர்சொல்.'' என்னும் உண்மையை நான் இன்றே அறிந்தேன். உன் வேண்டுகோளின்படி அச் செல்வரை இன்று முதல் என் நண்பராகக் கொள்வேன். உன் சாதுரியத்திற்கும் துணிவிற்கும் பரிசாக உனக்கு ஓராயிரம் பொன்னை யளிக்கின்றேன்; பெற்றுக்கொள்க,''என்று கூறினான்;பின்னர் அவனுக்குத் தக்க சிறப்புக்கள் செய்து அனுப்பினான்.

## கேள்விகள்

1. அரசன் ஏன் செல்வரைக் கொல்ல எண்ணினான்?
2. அரசன் செல்வர்மீது சாட்டிய முதற் குற்றம் என்ன?
3. அக்குற்றச் சாட்டிற்குச் செல்வர் அளித்த விடை யாது?
4. அரசன் அவர்மீது சாட்டிய இரண்டாம் குற்றம் என்ன?
5. அரசன் கேட்ட மூன்று கேள்விகள் யாவை?
6. செல்வர் ஏன் அவற்றிற்கு விடை காண முயன்றார்?
7. பணியாள் செல்வரிடம் வேண்டிக்கொண்டது என்ன?
8. அரசனது கேள்விக்கு அவன் அளித்த விடைகள் என்ன?
9. அரசனுக்குப் பணியாள் கூறிய அறிவுரை யாது?

## பயிற்சி

1. எதிர்ப்பதம் தருக:- அரசன், செல்வர், பணியாள், புகழ், பற்று, எண்ணுது, அச்சம், குற்றம், இயலும்.

2. ஒன்பதாவது பாராவில் உள்ள நேர் கூற்றுக்களை அயல் கூற்றுக்களாக மாற்றுக.

## அருஞ்சொற் பொருள்

அழுக்காறு—பொறாமை; இறுத்தல் — செலுத்துதல், அளித்தல்; இறை—வரி; பற்றுச்சீட்டு—ரசீது; இச்சகம்—இனிய சொற்கள்; புலனுதல்—தெரிதல்; எட்டுணை — எள்ளளவு; உற்றது — நேர்ந்தது; புகன்றான் — சொன்னான்; பகர்ந்தான்—சொன்னான்; பகலவன்—சூரியன்; அச்சாணி—வண்டியின் கடையாணி.

## 3. மகா வித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சுவாமிநாதையரைப் பற்றி, நீங்கள் கேள்விபட்டிருப்பீர்கள். கறையானுக்கும் மண்ணுக்கும் இறையாகி அழிந்து போகும் நிலைமையில் இருந்த பல பழைய தமிழ் ஏடுகளை யாவரும் படித்துப் பயன் பெறுமாறு அச்சிட்டு உதவிய பெரியார் அவர். அன்னருக்கு ஆசிரியராக இருந்தவர் நமது மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை என்னும் பெரும் புலவர். அவரது வாழ்க்கை யாவருக்கும் ஒரு சிறந்த வழிகாட்டியாகவும் எடுத்துக் காட்டாகவும் இருக்கத் தக்கது.



மகா வித்துவான்
மீனுட்சிசுந்தரம் பிள்ளை

மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களது வாழ்க்கை வரலாறு, அவரது மதிப்பிற்குரிய மாணுக்கராகிய சுவாமிநாதையரவர்களாலே மிக விரிவாக எழுதப்பெற்றிருப்பது நமக்குக் கிடைத்த ஒரு பெரும் பேருகும். வேறு எந்தத் தமிழ்ப் புலவரது வரலாறும் இத்துணை விரிவாகவும் முறையாகவும் இதற்கு முன்பு ஒருவராலும் எழுதப் பெறவில்லை. ஒரு பெரும் புலவரது வாழ்க்கை வரலாற்றை மற்ருெரு பெரும் புலவர் இங்ஙனம் எழுதிவைத்தது நம் தமிழ்நாட்டின் வரலாற்றிலே ஒரு புதுமையாகும். இவ்வரலாறு இரண்டு பகுதிகளாக 1934 ஆம் ஆண்டில் அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளது.

மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திரிசிரபுரத்தின் அருகில் உள்ள அதவத்தூர் என்னும் சிற்றூரில் சிதம்பரம் பிள்ளை, அன்னத்தாச்சியம்மாள் என்ற இருவருக்கும் 1815 ஆம் ஆண்டு பங்குனித் திங்கள் 26 ஆம் நாள் அருமகவாகத் தோன்றினர். சிதம்பரம் பிள்ளையும் அவரது முன்னேர்களும் மதுரை மீனுட்சி சுந்தரேசுவரர் கோயில் கருவூலத்தின் முத்திரையை வைத்திருக்கும் பொறுப்புடைய அலுவலாளராக இருந்தபடியால், சிதம்பரம் பிள்ளை மீனுட்சிசுந்தரர் திருப்பெயரையே தம் அருமை மகவுக்குச் சூட்டி மகிழ்ந்தார்.

சிதம்பரம் பிள்ளை, தமிழ் மொழியில் உள்ள சமய நூல்களையும் புராணங்களையும் நன்கு கற்றுக் கடவுட் பற்றுச் சிறக்கப் பெற்றிருந்தார். இலக்கண இலக்கியப் பயிற்சியும் கைவரப் பெற்றிருந்தார். அவர் அதவத்தூர் மக்களின் வேண்டுகோட்படி அங்கு நடத்திவந்த பள்ளி

யிலேயே, தம் மகனுக்குக் கல்வி பயிற்றுவித்தார். "மக னறிவு தந்தை யறிவு'' என்பதற்கேற்ப, மீனாட்சிசுந்தரம் பிள்ளை இளமையிலேயே தம் தந்தையைப் போலச் சிறந்த கல்வியறிவும் கூர்ந்த மதியும் உடையவராக விளங்கினார். அவரது சிறப்பு நோக்கி அவரேபள்ளியில் சட்டாம் பிள்ளையாக அமர்த்தப்பட்டார். சிறு வயதிலேயே செய்யுளியற்றும் திறனும் அவருக்குச் செவ்வனே வாய்த்தது. அவரது செம்பாகமான செய்யுட்களைக் கேட்டுக் கற்றோர்கள் களிப்பெய்தினர். இளமையில் அவர் பாடிய பாடல்களுக்குப் பலர் மனமுவந்து பாராட்டுகளும் பரிசுகளும் அளித்தனர்.

பிள்ளையவர்களது பதினைந்தாம் வயதில் தந்தையார் மண்ணுலக வாழ்வை நீத்தார். ஆதலால் அவர் திரிசிரபுரம் சென்று குடியேறினார். அங்கே அவருக்குப் பல பெரும் புலவர்களது பழக்கம் உண்டாயிற்று. பெருஞ் செல்வர் சிலர் அவருக்கு வேண்டிய பொருளுதவி புரிந்து புரந்து வந்தனர். அங்கு வேலாயுத முனிவர் என்னும் பெரியாரிடம் அவர் முறையாக நாடோறும் இலக்கிய இலக்கணப் பாடங்களைக் கேட்டு வந்தார். எழுத்து சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கியங்களையும் ஐயந்திரிபறக் கற்ற பின்னர் அவர் மேலும் மிக இனிமையாகச் செய்யுள் இயற்றும் ஆற்றல் பெற்றார்.

இளமை முதலே அவர் தெய்வம் கொள்கையோடு சிறந்த ஒழுக்கமும் உடையவராக விளங்கினார்; சமய நூல்களையெல்லாம் செவ்வனே கற்றுத் தேர்ந்தார். கோயில் வழிபாட்டின் பொருட்டு அவர் தலயாத்திரை

செய்யுங்கால், அவ்வத்தலங்களிலேயே பிரபந்தங்களை இயற்றிப் பாடுவார்.

'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்ற சொற்படி பிள்ளையவர்கள், கற்ற பெரியோர் எங்கிருப்பினும் அவர்களை நாடிச் செல்வார். சென்னை தாண்டவராய முதலியார், மதுரை மகாவித்துவான் சபாபதி முதலியார், மழவை மகாலிங்கையர் முதலிய பெரும் புலவர்கள் இருக்குமிடங்களுக்கு இவர் அடிக்கடி சென்று அவர்களோடு அளவளாவுவார். இவரது புலமையைக் கண்ட செல்வர் பலரும் இவரிடம் பாடங்கேட்க ஆர்வத்துடன் வருவாராயினர் இவரது மாணாக்கர்களுள் தலை சிறந்த புலவர்கள் என மதிக்கப்படுபவர்கள் வித்துவான் தியாகராசச் செட்டியார், சுவாமிநாதையர் என்னும் இருவருமே.

பெங்களூரிலிருந்த வல்லூர் தேவராசப் பிள்ளை என்னும் செல்வர், இவரிடம் பாடங்கேட்க விரும்பி இவரைத் தம்மூருக்கு வருமாறு வேண்டினர். அங்ஙனமே இவர் அங்குச் சென்று தங்கியிருந்த போதுதான், இவரது உதவியால் வல்லூர் தேவராசப் பிள்ளை குசேலோபாக்கியானம் என்னும் அரிய நூலை இயற்றினர்.

இவர் சைவ சமய நூல்களில் மிக்க தேர்ச்சியுடையவராயினும், கிறித்தவம், இஸ்லாம் முதலிய புறச் சமய நூல்களையும் நன்கு கற்றிருந்தார். ஆதலால் பல சமயத்தைச் சேர்ந்த பெரியோர்களும் இவரிடம் பாடங் கேட்க வருவார்கள். அப்பொழுது அச்சமயங்கள் சார்பாக அவர்களுக்கு உண்டாகும் ஐயங்களை இவர் அகற்றுவார்.

இஃதுஇவரது பரந்தஉள்ளத்தையும் விரித்தஅறிவையும் காட்டுகின்றதன்றே? கிறித்தவர்களுள் முன்சீபு வேத நாயகம் பிள்ளையும், முகமதியர்களுள் குலாம் காதிறு நாவலரும் இவரது மாணுக்கர்களாக இருந்தார்கள்.

பிள்ளையவர்களது தகுதியையும் திறமையையும் பற்றிக் கேள்வியுற்று வியப்படைந்த மேலகரம் சுப்பிர மணிய தேசிகர் என்பவர் அவரைத் திருவாவடுதுறை ஆதீன வித்துவானுக அமர்த்தினுர். அம்மடத்தில் இவர், தம்பிரான்களுக்கும் அதிகாரிகளுக்கும் தமிழாசிரியராக அமர்ந்து தமிழ் நூல்களைப் பாடம் சொல்லி வந்தார். இவரது கல்விப் பெருமையைக் கண்ட திருவாவடுதுறை ஆதீனம் இவருக்கு "மகாவித்துவான்" என்னும் பட் டத்தை வழங்கியது. அங்கிருக்கும்போதுதான் இவர் பல அரும்பெரும் பிரபந்தங்களை இயற்றினுர். அக் காலத் தில் இவருக்கு இணையாகத் தலபுராணங்களையும் பிரபந் தங்களையும் பாடக்கூடியவர் ஒருவரும் இல்லை.

பிள்ளையவர்கள் திருவாவடுதுறையில் இருந்த போதுதான், சுவாமிநாதையர் இவரிடம் மாணுக்கராக வந்தடைந்தார். இவரது அறிவைப் பிள்ளையவர்கள் பலவாறு சோதித்து அறிந்த பின்னரே, இவரைத் தம் மாணுக்கராக ஏற்றுக்கொண்டார். அந்த நிகழ்ச்சி, சுவாமிநாதையரது 'என் சரித்திரம்' என்னும் நூலில் மிகச் சுவைபட எழுதப்பட்டிருக்கிறது.

பிள்ளையவர்கள் திருவாவடுதுறையில் தமது 61ஆம் வயதில் காலஞ்சென்ருர். அவர் அழகான தோற்றமும் சிவந்த மேனியும் உடையவர்; பார்வைக்கு எளியராகவும்

காட்சிக்கு இனியவராகவும் இருந்தார். அவர் அமைதியும் பணிவும் இயல்பாகப் பெற்றவர். ஆழமான கடலில் அலை ஓய்ந்திருப்பது போல், ஆழ்ந்த கல்வியால் அவர் அமைதி பெற்றிருந்தார். அவர் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையை மேற்கொண்டொழுகி வந்தார்; என்றும் அவர் தம்மைப் பற்றி வியந்து பேசுவதில்லை; பிறரைக் குறை கூறுவதும் இல்லை. அவர் நமக்கு உதவினோர் மாட்டு நன்றியறிவு மிக்கவராய் இருத்தார்; துன்புற்றிருப்பவர்களிடம் இரக்கமும் பரிவும் காட்டுவார்.

இவரியற்றிய பல் நூல்களையும் டாக்டர் சுவாமிநாதையர் அவர்கள் தொகுத்து, "மீனாட்சிசுந்தரம் பிள்ளை பிரபந்தத் திரட்டு" என்ற பெயருடன் வெளியிட்டிருக்கின்றார். தமிழகத்தைத் தமிழின்பத்தில் ஈடுபடுமாறு செய்த பெரியோர்களுள் இவர் சிறந்தவர்; தமிழ் நூற் கோவையில் இவர் நூல்கள் முத்துக்கள் போல்வன. இவர் இறந்துவிட்டாராயினும் இவரது புகழ் என்றும் இறவாது நிலைத்திருக்கும் என்பது உறுதி.

### கேள்விகள்

1. மீனாட்சிசுந்தரம் பிள்ளை வரலாற்றை யார் எம்முறையில் எழுதியிருக்கிறார்.

2. பிள்ளையவர்களது இளமைக் கல்வியைப் பற்றிச் சுருக்கி எழுதுக.

3. தந்தை இறந்த பிறகு இவர் யாரிடம் எங்குக் கல்வி கற்றார்?

4. இவரது புலமையைப்பற்றிச் சுருக்கிக் கூறுக.

5. இவரது பரந்த உள்ளத்தையும் விரிந்த அறிவையும் எதனுல் அறியலாம்?

6. இவர் திருவாவடுதுறையில் செய்த பணி யாது?

7. பிள்ளையவர்களது பண்புகளைக் கூறுக.

## பயிற்சி

1. உமது சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுதுக:— கைவரப்பெறுதல், செம்பாகமாக, ஐயந்திரிபற, செவ்வனே, அளவளாவுதல்.

2. பிரித்தெழுதுக:— தமிழின்பம், கடவுட்பற்று, ஐயந்திரிபற, மனமுவந்து, நாடோறும்.

## அருஞ்சொற்பொருள்

கைவருதல்—கிடைத்தல்; இலங்குதல்—விளங்குதல்; புரத்தல்—பாதுகாத்தல்; செவ்வனே—நன்ருக; வாய்த்தது—உண்டாயிற்று; செம்பாகமான — இனிமையான; ஐயந்திரிபற—சந்தேகமும் மயக்கமும் இன்றி; பிரபந்தம்—நூல்கள்.

---

# 4. குகை ஆராய்ச்சி

இயற்கையானது, மனிதனறியாமல் மறைத்துவைத்திருக்கும் செய்திகள் பலவாகும். கடத்தற்கரிய ஆப்பிரிக்கக் காடுகளும், ஆறுகளும், ஏறுதற்கரிய எவரெஸ்டு, காஞ்சன சிருங்கம் முதலிய கொடுமுடிகளும், பறந்து சென்று காண்டற்கரிய பரந்த வானவெளியும், மூழ்கி ஆழம் காண முடியாத ஆழ்கடல்களும், பிறரறியாது நிலத்தில் மறைந்து கிடக்கும் பாதாள அறைகளும் என அவை அளவில.ஈண்டு இயற்கையின் இரகசியப்பாதாள அறை ஒன்றில், அறிவு ஆவல் கொண்ட சில வீரர்கள் இறங்கிச் சென்று கண்ட காட்சிகளை விவரிப்போம்.

பூமி மட்டத்திலிருந்து 2000 அடிக்குக் கீழ் உள்ள இயற்கையின் மிகப் பெரும் பாதாள அறை ஒன்று; அதில் எங்கும் ஒரே இருள்; வளைந்து வளைந்து செல்லும் நீண்ட சுரங்க வழிகள்; அவற்றில் அளவற்ற மேடு பள்ளங்கள்; எங்கும் கடினமான சுண்ணும்புப் பாறைகள்; ஆங்காங்கு அபாயமான சக்தி நிறைந்த குழிகள்; மேலிருந்து கீழ் நோக்கியும் கீழிருந்து மேல் நோக்கியும் நீட்டிக்கொண்டிருக்கும் கூர்மையான தூண்கள் போன்ற பாறைகள்; பக்கங்களில் உள்ள இடுக்குகள், பிளவுகள் ஆகியவற்றின் வழியாக ஓவென்று இரைந்து கொண்டு வரும் அருவிகள்; எங்கோ மறைவிலிருந்து அடிக்கடி சரேலெனப் பொங்கி வரும் வெள்ளப் பெருக்குகள்; ஆகிய இத்தகைய இயற்கையின் அஞ்சத்தகுந்த விளையாட்டரங்கமாக விளங்கியது ஒரு குகை.

அதில் சிறிதும் அஞ்சாது ஒரு சிறு கூட்டம் முன்னேறிச் சென்றது. நிலமட்டத்திலிருந்து 2000 அடி கீழே செங்குத்தாக அதில் இறங்கிப் பிறகு வளைந்து வளைந்து செல்லும் அதன் போக்கில் அக் கூட்டம் சென்றது. அதில் மறைந்து கிடைக்கும் இயற்கையின் இரகசியங்களையறிய வேண்டுமென்னும் அவாவுடன் உறுதிகொண்டு, உலையா உள்ளத்துடன், உயிரைத் துரும்பாக மதித்து அக்கூட்டம் சென்றது.

திடீர் திடீர் என்று எதிர்பாராமல் அங்கே விபத்துகள் நேரிடுகின்றன. அவற்றை விலக்கவோ வருமுன்னர் காக்கவோ சிறிதும் இயலவில்லை. அவ்விருண்ட குகையில் சாதாரண விளக்கொளி உதவுவதில்லை. ஏனெனின் அதனுல் புகை சூழ்ந்துகொண்டு மூச்சுத் திணறும், அன்றியும் அங்குள்ள நச்சுப் புகைள் திடீரென்று தீப் பற்றி வெடித்துப் பாறைகளைச் சிதறும்; அல்லது குகையின் பக்கங்கள் இடிந்து விழும். எனவே மின்சாரவிளக்குகளையும் அவற்றை எரிப்பதற்குரிய மின்கலங்களையும் முன்ஜாக்கிரதையாக அவர்கள் எடுத்துச் சென்ருர்கள். மின்சார விள்க்குகளின் ஒளியில் கூடத் திடீரென்றுவரும் வெள்ளங்களை எங்கிருந்து எப்படி வருகின்றன என்று அறியக்கூடவில்லை. அப்படி வருகின்ற பெருவெள்ளத்தில் சிலர் அடித்துக்கொண்டு போவதைத் தடுக்கவும் முடியவில்லை. சிலர் அக்குகையில் இறந்துபட்ட உயிர்களின் அழிபொருள்களும் மண்ணும்கலந்துநச்சுக்காற்றுகள் நிறைந்த பள்ளங்களில் தவறி விழுந்து விட்டனர்; உடனே அவர்கள் போன இடம் தெரியாமல் மறைந்து விட்டனர். அவர்களை மற்றவர்கள் மீட்கவும் முடியாது

தவித்தனர், சில இடங்களில் மிகக் குளிர்ந்த நீர்நிலைகளும், மேல் நோக்கிப்பீச்சும் பனிநீர்த்தாரைகளும், பனிக்கிணறுகளும், பனியாறுகளும் இருந்தன. இவை எல்லாவற்றையும் எதிர்த்துக் கடந்து குகையில் முன்னேறினர் எஞ்சியுள்ள வீரர்; பல நாட்கள் வரை வெளி உலகத்துடன் தொடர்பின்றி அவர்கள் தனித்துத் துன்ப மிகுந்த நிலையில் உறைந்தனர்.

குகைக்குள் அவர்கள் எடுத்துச் சென்ற பொருள்களின் சுமை மற்றொரு புறம் அவர்களைக் குற்றுயிராக்கி விட்டது. பல நாட்களுக்கு வேண்டிய உணவு, உடைகள் மட்டுமன்றி திசையறி கருவி, உயரமானி, உஷ்ணமானி, பாரமானி, ஈரமானி முதலிய கருவிகளும், விளக்குகளுடன் கூடிய தலைக் கவசங்கள், ரப்பர்க் குழாய்கள், கயிறுகள், ஏணிகள், கம்பிகள், தெப்பங்கள் (புணைகள்.) நீந்தும் உடைகள், தொலைபேசி, (டெலிபோன்) முதலியவற்றையும் அவர்கள் சுமந்து சென்றார்கள்.

குகையில் சென்றவர்கள் வெடித்துக் கிடந்த பழம் பாறை ஒன்றில் பதிந்திருந்த எலும்பொன்றை எடுத்து, அதை வியப்புடன் நோக்கினார்கள். அது ஒரு மனித எலும்புபோல் இருந்தது. அது அங்கே எப்படி வந்தது என்று அவர்கள் ஆராயலானார்கள். அது மிகப் பழங் கால மனிதனுடைய எலும்பாயிருக்க வேண்டுமென்று அவர்கள் ஊகித்தார்கள். அங்கேயே மிகப் பழங் காலத்தில் வாழ்ந்துவந்த மனிதனின் எலும்பாக அது இருக்கக் கூடுமோ? அல்லது அங்கேதவறி விழுந்துஇறந்துபோன ஒருவனின் எலும்போ? என்று அவர்கள் துணியக்கூட

வில்லை. அவ்வெலும்பின் வயது பல லட்சம் வருடங்கள் இருக்கலாம் என்று மட்டும் அவர்கள் துணிந்தார்கள். ஆகவே பல லட்சம் ஆண்டுகளுக்கு முன்பே மனிதன் தோன்றினன் என்ற முடிவுக்கு வந்தார்கள்.

மேலும் அவர்கள் சென்றபோது அங்குப் பளிங்குக் கற்களால் செய்யப்பட்ட கருவிகள் சில கிடைத்தன. அவை மனிதனல் செய்யப்பட்டுக் கையாளப்பட்டவை என்பது தெளிவாகத் தெரிந்தது. பளிங்குக்கற்கருவிகள், வரலாற்று அறிஞர் கூறும் பழைய கற்காலம், புதிய கற்காலம் என்னும் இரண்டு காலங்களிலும் இல்லை. எனவே அவை அவ்விரண்டுகாலங்களுக்கும் முற்பட்டன வாக இருக்கவேண்டும். அக்குகையில்வாழ்ந்த பழங்கால மனிதனின் கருவிகளாக அவை இருக்கக்கூடும் என்று அவர்கள் கருதினர்கள். மற்றும் சில உயிர்களின் எலும்பு களும் அருகிலேயே பாறைகளில் பதிந்து கிடந்தன. ஆகவே அவ்வுயிர்களும் மிகப்பழங்காலஉயிர்களாயிருக்க வேண்டும். ஆனல் அத்தகைய உயிர்கள் அக் குகைக்கு மேலே உள்ள நிலப் பரப்பில் எங்கும் இல்லை. இதற்குக் காரணம், அவற்றின் இனம் பல லட்சம் ஆண்டுகளுக்கு முன்பே அழிந்து விட்டதுதான்.

அக்குகையில் மற்றோரிடத்தில் ஒரு பழங்காலச் சிற் பம் கிடைத்தது. இது அவர்களுக்கு அளவற்ற வியப் பைத் தந்தது. ஆதிகாலத்து மனிதன் அநாகரிகமானவன் என்று கருதியிருந்த அவர்களுக்கு அச்சிற்பம் அங்குவந்த வரலாறு விளங்கவில்லை. அது மிக நுட்பமான கருவிக ளால் செதுக்கப்பட்டிருந்தது. அதில் பல விலங்குகளின்

உருவங்கள் காணப்பட்டன. பிறிதோரிடத்தில் ஒரு காட்டெருமையின் தலையற்ற உருவமாகச் செதுக்கப் பட்ட சிற்பம் கிடைத்தது. அதன் தலை மட்டும் இல்லை. பின்னுமோரிடத்தில் ஒரு கரடியின் சிற்பம் அகப்பட்டது. இவற்றையெல்லாம்கண்ட அவர்கள் அக்காலமனிதனின் சிற்பத் திறத்தையறிந்து வியப்பெய்தினர்.

குகையில் வெண்மையான காளான்கள் பல கிடைத் தன. அண்மைக் காலத்தில் மக்கள் குகை வாயிலில் வைத்திருந்த மின்சார விளக்குகளின் ஒளியில் குகைக் குள்ளே வளர்ந்திருந்த சில செடிகளையும் அவர்கள் கண் டார்கள். குகையின் வாயிலில் இயற்கையாக ஞாயிற்றொ ளியில் வளர்ந்திருந்த சில செடிகளையும் அவர்கள் கண் ணுற்றனர்கள். இம்மூவகைத் தாவரங்களுக்குள்ள வேற் றுமை அவர்களது கருத்தைக் கவர்ந்தது. அவை அவர் களது அறிவிற்கு அருவிருந்தாக இருந்தன. அவற்றைப் பற்றிப் பல ஆராய்ச்சிகளை அவர்கள் செய்யலானார்கள்.

குகைக்குச் சென்ற குழுவினர் பலவகைப் புதிய பொருள்களையும் குறிப்புகளையும் திரட்டிக் கொண்டு பெருஞ்சுமையுடன் மேலே வந்தார்கள். பிறகு அவற்றை விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிக்கு ஒப்படைத்தார்கள். அவற்றிலிருந்து விஞ்ஞானிகளின் கண்டறிந்த உண் மைகள் பலவாகும்.

அவற்றுள் முதலாவது, அத்தகைய குகைகள் நிலத் தினடியில் சில இடங்களில் ஓடும் பெரிய நீரோடை களால் அரித்து உண்டாக்கப்பட்டவை என்பது. சுண்ணாம்புப் பாறைகளில் தான் அவை அவ்வாறு

எளிதில் குடையப்படும். இத்தாலி, பிரான்ஸ், ஆஸ்திரியா அல்ஜீரியா, யுகோஸ்லேவியா ஆகிய இடங்களில்தான் அவை அதிகமாகக் காணப்படுகின்றன. இக்குகைகளின் அடித்தல மட்டமே பல லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு பூமியின் மேற்புறணியாக இருந்திருக்கவேண்டும். அங்கு மக்களும் மற்ற உயிரினங்களும் வாழ்ந்து வந்தன. அந்த இடம் திடீரென்று ஏற்பட்ட வெப்ப தட்ப மாறுதல் களாலும் அவற்றின் விளைவான இடப் பெயர்ச்சியாலும், ஆழமாகப் போய்விட்டது. பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு மண்மூடிப்போன அவ்விடத்தை அருவிகள் குடைந்து குகைகளாக்கி விட்டன.

பூமியில் ஏற்பட்ட வெப்பதட்ப நிலை மாறுதல்களா லும் இடப்பெயர்ச்சியாலும் அங்கு முன்பிருந்த உயிரினங் களும் அழிந்துவிட்டன. புதைப்பட்ட எலும்புப் பாறைகள் அடுக்கடுக்காக ஒன்றின்மேல் ஒன்ருக இருப் பதால், இத்தகைய வெப்பதட்ப மாறுதல்கள் பன்முறை நிகழ்ந்திருக்கவேண்டுமென்று கருதப்படுகிறது.

இப்போது ஐரோப்பாவில் யானை, சிங்கம், புலி, கரடி முதலியவை இல்லையாயினும் பல்லாயிரம் ஆண்டு கட்கு முன்பு அவை அங்கிருந்தன என்று இப்புதை பொருள்கள் சான்று பகர்கின்றன. அப்போது ஐரோப்பா உஷ்ண மண்டலக்காடுகள் அடர்ந்த இட மாக இருந்திருக்கவேண்டுமென்றுத் தெரிகிறது.

குகையாராய்ச்சியால் எதிர் காலத்தில் நிலநூல், புதைபொருள் நூல், உயிர்நூல், சரித்திர காலத்திற்கு முற்பட்ட பழங்காலம், ஆகியவற்றைப் பற்றிய நமது

அறிவு உரம் பெறும். இத்துறையில் ஆராய்ச்சியானது கடந்த முப்பது ஆண்டுகளாக அதிகம் முன்னேறியுள்ளது.

## கேள்விகள்

1. இயற்கையின் மறைவிடங்கள் எனக் கருதத் தக்கவை எவை?
2. சாதாரண விளக்குகளால் குகைகளில் நேரும் அபாயங்கள் என்ன?
3. குகைக்குள் எடுத்துச்செல்லப்பட்ட பொருள்கள் எவை?
4. குகைக்குள் கண்டெடுக்கப்பட்ட பொருள்கள் எவை?
5. குகையில் காணப்பட்ட மூவகைத் தாவரங்கள் என்ன?
6. எங்கெங்கு இத்தகைய குகைகள் உள்ளன?
7. குகைவாழ் உயிர்கள் அழிந்துவிட்டதற்குக் காரணம் என்ன?
8. குகை ஆராய்ச்சியால் பயன் யாது?

## பயிற்சி

1. இரண்டாவது பாராவில் உள்ளதுபோல ஓர் அடர்ந்த காட்டின் வருணனையைச் சொந்தமாக எழுதுக
2. மக்களது நாகரிக வளர்ச்சியில் பழங்கால நிலையை வருணித்துப் பத்து வரிகள் எழுதுக.

## அருஞ்சொற்பொருள்

சகதி—சேறு; உலையா—சளைக்காத, தளராத; நச்சு—நஞ்சு, விஷம்; ஈரமானி—காற்றிலுள்ள ஈரத்தை யளக்கும் கருவி; ஊகித்தல்—யோசித்தறிதல்; வெப்பதட்பம்- சீதோஷ்ணம்; உரம்—வலிமை.

## 5. தபால் தந்தி நூற்றுண்டு விழா

*(உரையாடல்)*

சோமு : கண்ணு, நீ நேற்று உன் தகப்பனுருடன் தபால் தந்தி நூற்றுண்டு விழாவிற்குச் சென்றிருந்தாய் என்று கேள்விப்பட்டேன்; உண்மையா?

கண்ணன்: ஆம், சோமு; உன்னேயும் அழைத்துக் கொண்டு போகலாம் என்றுதான் எண்ணினேன். ஆனுல் என் தகப்பனுர் நேரமாகிவிட்டது என்று என்னே அழைத்துச் சென்றுவிட்டார்; முன்பே உனக்கு அறி விக்கவும் முடியவில்லே. அதற்காக மிகவும் வருந்து கிறேன்.

சோமு: அதைப் பற்றி என்ன? நான் உன்னுடன் வராவிட்டாலும், நீயாவது சென்று பார்த்தாயல்லவா? நீ பார்த்தவற்றை விவரமாக எனக்குச் சொன்னுல் நான் பார்ப்பதைப் போலவே மகிழ்ச்சியடைவேன்.

கண்ணன் : நானும் அதைப் பற்றி உன்னிடம் சொல்லத் துடித்துக்கொண்டுதான் இருக்கிறேன்.

சோமு: விழா, தலேமைத் தபால் அலுவலகத்தில் தான் நடைபெற்றது என்று கேள்விப்பட்டேன். அங்கு என்னென்ன பார்த்தாய்?

கண்ணன்: தலேமைத் தபால் அலுவலகம் மிகவும் நன்ருக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கே தபால் தந்தி

இலாகா சென்ற ஒரு நூற்றுண்டில் வளர்ச்சியடைந் துள்ள விதத்தைப் பற்றிக் குறிப்புகளும் படங்களும் செய்திகளும் காட்சிக்காக வைக்கப்பட்டிருந்தன.

**சோமு :** தபால் தந்தி முறை நம் நாட்டில் தோன்றி நூறு வருடங்கள் ஆய்விட்டனவா? அது எப்பொழுது யார் காலத்தில் தோன்றியது?

**கண்ணன் :** சரித்திரப் பாடத்தில் நீ படித்திருப்பாய் அல்லவா? நம் நாடு ஆங்கிலேயரது கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தபோது டல்ஹெளசி என்னும் கவர்னர் ஜெனரல் காலத்தில், 1854 ஆம் ஆண்டில், இங்கு முதல் முதலில் அரையணு தபால் முறை தொடங்கப்பட்டது. அதற்கு முன் வருடம் அவரது ஆட்சிக் காலத்திலேயே இருப்புப் பாதை. முதல் முதலாக இங்குப் போடப்பட்டது. ஆகவே இருப்புப் பாதை மூலம் தபால்களை வெவ்வேறு ஊர்களுக்கு அனுப்ப அது உதவியாயிருத்தது.

**சோமு :** அதற்கு முன்பு நம் நாட்டில் எப்படித் தபால்களை அனுப்பி வந்தார்கள்? ஒரு வேலை மனிதர்கள் மூலமாகவே அனுப்பி வந்தார்களா?

**கண்ணன் :** ஆம்; சில சமயங்களில் மனிதர்கள் குதிரைகள் மீது வேகமாகச்சென்று தபால்களை அனுப்புவதும் உண்டு. பதினாரும் நூற்றுண்டில் நம் நாட்டில் ஷெர்ஷா என்னும் மன்னன் காலத்தில் (1540—45) இத்தகைய குதிரைத் தபால் முறை, முதல் முதலாகத் தொடங்கப்பெற்றது.

**சோமு :** சில சமயங்களில் குருவி, புரு, கிளி முதலிய வற்றைப் பழக்கி அவற்றின் கழுத்தில் கடிதங்களைக் கட்டிக் குறிப்பிட்ட இடத்திற்கு அனுப்புவதும் உண் டென்று கேள்விப்பட்டிருக்கிறேன், அது உண்மையா யிருக்குமா?

**கண்ணன் :** உண்மையா யிருக்கலாம். இப்பொழு தும் நம் நாட்டில் ஓரிடத்தில் ரகசியத் தபால்களை அனுப் புவதற்குச் சிலர் இம்முறையைக் கையாளுகிருர்கள் என்று நான் அண்மையில் ஒரு செய்தித்தாளில் படித்தேன். இது மிகப் பழைய முறை. இவ்வழியில் எல்லா இடங் களுக்கும் அதிக தபால்களை அனுப்பமுடியாது. இக் காலத்தில் ரயில்கள் மூலமாக ஒவ்வோர் ஊருக்கும் வரும் மிகப் பெரிய தபால் கட்டுகளைப் பார்த்தால், இவ்வுண்மை விளங்கும். ரயில்களில் மட்டுமின்றி விமானங்களில் கூட இக்காலத்தில் மிக விரைவாகத் தபால்கள் எடுத்துச் செல்லப்படுகின்றன.

**சோமு :** சரி, தந்தியில் செய்தி அனுப்பும் முறையை எப்பொழுது யார் காலத்தில் இங்குத் தொடங்கினுர்கள்?

**கண்ணன் :** அதையும் 1854 ஆம் ஆண்டில் டல் ஹௌசி காலத்திலேயேதான் தொடங்கினுர்கள். தந்தி, தபால் இரண்டும் ஒருங்கே தொடங்கப்பட்டன.

**சோமு :** ஏன் அவ்விரண்டையும் ஓர் இலாகாவாக அரசாங்கம் நடத்தி வருகிறது? இரண்டும் வெவ்வேறு முறைகள் அல்லவா?

**கண்ணன்:** ஆம், இரண்டும் வெவ்வேறு முறைகள்தான். ஆயினும் இரண்டும் செய்தியனுப்புவதற்குரிய ஏற்பாடுகளே; ஆதலால் அவற்றை ஓர் இலாகாவாக வகுத்திருக்கிருர்கள்.

**சோமு:** நிற்க; இவற்றின் நூற்ருண்டு விழாவில் நீ கண்ட மற்றச் செய்திகள் யாவை?

**கண்ணன்:** நம் நாட்டில் முதலில் காலணு தபால் கார்டும் அரையணு தபால் உறையும் பொதுமக்களுக்கு விற்கப்பட்டன. அவை எல்லாப் பெரியஊர்களிலும்தபால் அலுவலகங்களில் விற்கப்பட்டன. அவற்றில் மக்கள், செய்தி எழுதித் தபால் பெட்டிகளில் போட்டுவிட்டால், அவை யாருக்குச் சேரவேண்டுமோ அவர்களுக்குச் சேர்ப்பிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் இவ்வெளிய முறையால் நெடுந்தூரமுள்ள ஊர்களுக்கும் செய்தியனுப்ப ஆவலோடு முன்வந்தனர். சில வருடங்களுக்குள் அரசாங்கத்திற்கு இதன் மூலம் அதிக வருவாய் வந்தது. ஆகவே இம்முறை சிறு ஊர்களுக்கும் கிராமங்களுக்கும் பரப்பப்பட்டது. இதனுல் அரசாங்கத்திற்குக் கோடிக் கணக்கில் வருமானம் கிடைத்தது. தபால் இலாகா இவ்வாறு தோன்றிவளர்ந்த செய்தி அங்கே படங்கள் மூலமாகவும் புள்ளி விவரங்கள் மூலமாகவும் விளக்கப்பட்டிருந்ததைப் பார்த்தேன்.

**சோமு:** விழாக் கண்காட்சியில் ஆண்டுதோறும் கிடைத்த வருமானம், தபால் அலுவலகங்களில் எண்ணிக்கை முதலியவையும் குறிக்கப்பட்டிருந்தன வன்ரே?

கண்ணன்: ஆம், அப்புள்ளி விவரங்கள் மிக விரிவாகக் குறிக்கப்பட்டிருந்தன. தபால் கார்டுகள், உறைகள், தந்திகள், மணியார்டர்கள், இன்ஷூரன்ஸ்கள் பார்சல்கள் முதலிய ஒவ்வோர் இனத்திலும் கிடைக்கும் வருமானங்களின் புள்ளி விவரங்கள் அங்கே குறிக்கப் பட்டிருந்தன.

சோமு: அப்படியா? தபால் இலாகாவுக்கு இத்தனை வகைகளில் வருமானம் கிடைக்கிறதா? அப்பொழுது அவ்வருமானம் மிக அதிகமாகத்தான் இருக்க வேண்டும்.

கண்ணன்: இக்காலத்தில் டெலிபோன், ரேடியோ முதலிய வேறு இனங்களிலும் அதற்கு வருமானம் கிடைக்கிறது. ஆண்டுதோறும் பல கோடி ரூபாய்கள் லாபம் கிடைக்கிறது. அவ்விலாபத்தைக் கொண்டு மக்களுக்கு மேலும் பல நன்மைகளை அரசாங்கம் செய்து வருகிறது.

சோமு: அப்படியா? அந்த நன்மைகள் என்ன?

கண்ணன்: மக்களின் நன்மைக்காகச் சிறு சிறு கிராமங்களிலும் தபால் அலுவலகங்கள் திறக்கப்படுகின்றன; நகரங்களில் பல இடங்களில் டெலிபோன் நிலையங்கள் வைக்கப்படுகின்றன; நெடுந் தூரமுள்ள ஊர்களுக்கு விமானம் மூலம் விரைவில் தபால்கள் எடுத்துச் செல்லப்படுகின்றன.

சோமு: ஆனால், தபால் கட்டணங்களைக் குறைத்தால் மேலும் நன்மையல்லவா? அதை ஏன் அரசாங்கம் செய்யவில்லை?

**கண்ணன் :** செய்யலாம்; ஆனால் தபால் ஊழியர்களுக்கு அதிக ஊதியமும் நன்மைகளும் அளிக்க வேண்டாமா? அதற்குப் பணம் வேண்டுமல்லவா? இக்காலத்தில் எல்லாத் தொழிலாளிகளும் அதிகஊதியம் வேண்டுமென்று கேட்கிறார்கள். அதைப்போல அவர்களுக்கும் அதிக ஊதியம் கொடுப்பது நியாயம்தானே?

**சோமு :** தபால் தந்தி இலாகா நூற்றாண்டு விழாவின் நினைவுச் சின்னங்களாகப் பலவிதமான தபால் தலைகளை அச்சிட்டு விற்பதைக் கண்டேன். அவை எல்லாம் மிகவும் அழகாக இருக்கின்றன. இதற்கு முந்திய ஆண்டில் ரயில்வே இலாகாவின் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்ட போதும் இப்படியே நினைவுச் சின்னங்களாகத் தபால் தலைகளை வெளியிட்டிருந்தார்கள். அத் தபால்தலைகளை யெல்லாம் நான் சேகரித்து வைத்திருக்கிறேன். உன்னிடம் அத்தகைய தபால் தலைகள் இருந்தாலும் எனக்குக் கொடு.

**கண்ணன் :** கொடுக்கிறேன். என்னிடமும் சில இருக்கின்றன. அவற்றை யெல்லாம் பத்திரமாக வைத்திரு.

**சோமு :** கண்காட்சியில் நீ குறித்துக்கொண்டு வந்த புள்ளி விவரங்களைக் கொடு. அவற்றையும் என் தபால் தலைப் புத்தகத்தில் எழுதி வைத்துக்கொள்கிறேன்.

**கண்ணன் :** சரி, தருகிறேன். நிற்க, தபால் இலாகாவினால் பொதுமக்களுக்கு எவ்வளவு நன்மை பார்த்தாயா? எவ்வளவு தூரமுள்ள இடங்களுக்கும் ஓரே

குறிப்பிட்ட செலவில், செய்திகளை எளிதாக அனுப்ப முடிகிறது? ஒரு கார்டையோ, உறையையோ வாங்கிச் செய்தி எழுதித் தபாலில் போட்டால், எவ்வளவு விரைவில் அது சேரவேண்டிய இடத்திற்குச் சேர்க்கப்படுகிறது? முற்கால குதிரைத் தபால் முறைக்கும் இக்கால ரயில் தபால் முறைக்கும் எத்தனை வேறுபாடு இருக்கிறது பார்த்தாயா?

**சோமு :** ஆம், நானும் அதை எண்ணிப் பார்த்தேன். பழங்காலத்தில் நெடுந்தூரமுள்ள இடங்களுக்குச் செய்திகளை அஞ்சல் முறையினுல்தான் அனுப்ப வேண்டும். சிறிது தூரம் ஒருவர் அதை எடுத்துக்கொண்டு போய் ஒருவரிடம் கொடுக்க, அவர் மீண்டும் சிறிதுதூரம் சென்று மற்றொருவரிடம் கொடுக்க, இப்படியே நீண்ட காலம் சென்று நெடுந்தூரமுள்ள இடங்களுக்குச் செய்தி அனுப்பப்படும். அத்தகைய அஞ்சல் முறை இப்பொழுது அகன்று விட்டது. எவ்வளவு தூரமாயினும் ரயில், கப்பல், மோட்டார், விமானம் முதலிய வேகமாகச் செல்லும் சாதனங்களால் செய்தி மிகவிரைவாகச் சென்று சேர்ந்து விடுகிறது. சில நிமிடங்களில் தந்தி மூலம் செய்திகள் சென்றுவிடுகின்றன. இத்துணை வசதிகளை அக்கால மக்கள் அறிந்திருக்கவில்லையல்லவா?

**கண்ணன் :** அக்காலத்தில் அதனுல் உலகம் மிகப் பெரிதாகத் தெரிந்தது. இப்பொழுதோ, விரைவாகச் செல்லும் போக்குவரவு சாதனங்களாலும், தபால், தந்தி, வானெலி, கம்பியில்லாத் தந்தி முதலிய முறைகளாலும் உலகம் சுருங்கிவிட்டதென்றே சொல்லலாம். இப்பொழுது எவ்வளவு தொலைவில் உள்ள இடங்களும் நமக்கு

ஒரு பொருட்டல்ல. உலகத்தில் எந்த இடமும் நமக்கு மிக அண்மையில் இருப்பதுபோல ஆகிவிட்டது. தபால் தந்தி முறையின் சிறப்பான நன்மைகளில் இது ஒன்ருகும்.

சோமு : ஆம், கண்ணு, இதைப்பற்றிச் சிந்தித்துப் பார்த்தால் மனிதனின் அறிவில் உண்டாயிருக்கும் முன் னேற்றமே இதற்குக் காரணம் என்பதைத் தெரியலாம். அறிவு முன்னேற முன்னேற அவன் பல அரும்பெருஞ் செயல்களைச் செய்து வருகிருன்.

கண்ணன் : சோமு, நான் என் த்கப்பனுருடன் வெளியே செல்லவேண்டியிருப்பதால், உன்னிடமிருந்து விடைபெற்றுக்கொள்கிறேன். நாளை உன்னைச் சந்திக் கிறேன்.

சோமு : நல்லது, நன்றி.

## கேள்விகள்

1. தபால் தந்திமுறை நம்நாட்டில் யார் காலத்தில் எவ் வருடம் தொடங்கப்பட்டது?

2. தபால் தந்தி நூற்ருண்டு விழாவில் அமைக்கப் பட்டிருந்த காட்சிகள் எவை?

3. பழங்காலத்தில் நம் நாட்டில் இருந்த செய்தியனுப் பும் முறைகள் யாவை?

4. இக்காலத்தில் உள்ள செய்தியனுப்பும் முறையால் உண்டாகும் நன்மைகள் யாவை?

5. 'விரைவான போக்குவரத்துச் சாதனங்களால்உலகம் சுருங்கிவிட்டது'—இக்கருத்தை விளக்குக.

## பயிற்சி

(1) உன் விலாசத்திற்குக் கிடைக்கும் தபால் கார்டு ஒன்று அதன் வரலாற்றை உன்னிடம் கூறுவது போல 15 வரிகளில் எழுதுக.

(2) தபால் தலைகளைச் சேகரித்து வைத்தல் ஒரு நற்பொழுதுபோக்கு என்பதை விளக்கி உன் சகோதரனுக்கு ஒரு கடிதம் எழுது.

## அருஞ்சொற்பொருள்:

அலுவலகம் — காரியாலயம் (ஆபீஸ்); சின்னங்கள் —அடையாளங்கள்; அஞ்சல் முறை—ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செய்தியை வெவ்வேறு ஆட்கள் மூலம் மாற்றியனுப்பும் முறை.

-----

# 6. கலை இயல் பேரறிஞர் ஐன்ஸ்டைன்

இந்த நூற்றுண்டின் உலகத்தில் விஞ்ஞானத்துறை யில் உண்டாகியுள்ள மிகப்பெரிய மாறுதல்களுக்குக் காரணமானவர்கள் எல்லாருள்ளும் தனிப்பட்ட ஒருவரை மட்டும் குறிப்பிட வேண்டுமானுல், அவர் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் என்னும் பேரறிஞர்தான். இருபதாம் நூற்றுண்டு அணுசக்தியுகம் என்றுஅழைக்கப்படுவதற்கு அடிப்படை இட்டவர் அவரே.

ஜர்மனி தேசத்தில் உர்டெம்பர்க் என்னும் மாகாணத்தில் உல்ம் என்னும் ஊரில் 1879ஆம் ஆண்டு யூதர் மரபில் ஐன்ஸ்டைன் பிறந்தார். அவர் முதலில் மியூனிக் என்னும் ஊரில் உள்ள பள்ளியில் பதினுரும் வயது வரையில் கல்வி பயின்ருர். அப்பொழுது அவர் கீழ் வகுப்புக்களிலேயே உயர் வகுப்புக் கணிதங்களையெல்லாம் பிறர் உதவியின்றித் தாமே கற்ருர். பிறகு பெற்ருேர்களுடன் இத்தாலியில்உள்ளமிலான் நகரத்திற்குச் சென்ருர்; அங்கிருந்து சுவிட்சர்லாந்து


ஆல்பர்ட் ஐன்ஸ்டைன்

நாட்டிற்குப் படிக்கச் சென்றார்; அந்நாட்டில் சூரிச் என்னுமிடத்தில் உள்ள தொழில் நுணுக்கப் பள்ளியில் நான்குஆண்டுகள் கணிதம்,பௌதிகம் முதலிய கலைகளை நன்கு கற்றுத் தேர்ந்தார். அப்போது அவர் பௌதிகத் துறையில் பல சோதனைகளைச் செய்வதிலேயே தம் காலத்தில் பெரும்பகுதியைச் செலவிட்டார். பரிசோதனைகள் தான் அவர் மனத்திற்குப் பெருவிருந்தாக இருந்தன. அப்பொழுதே அவர் பௌதிகத் துறையில் வழங்கிவந்த சில பழங்கொள்கைகளில் இருந்த முரண்பாடுகளைக் கண்டுபிடித்து அவற்றிற்கு ஒரு முடிவு காணமுயன்றார்.

தமது கல்விப் பயிற்சியை ஒருவாறு முடித்துக் கொண்டு 1901 ஆம் ஆண்டில் அவர் சுவிட்சர்லாந்தில் பார்னே என்னுமிடத்தில் உள்ள ஓர் எந்திர உரிமைப் பதிவு அலுவலகத்தில் (Patent office) வேலையில் அமர்ந்தார். அப்பொழுது அவர் பல தீவிரமான சிந்தனைகளையும் ஆராய்ச்சிகளையும் செய்து அடிக்கடி தாம் கண்ட உண்மைகளைக் கட்டுரைகளாக எழுதி வெளியிட்டு வந்தார்.

அதன் விளைவாக அவர் சூரிச் பல்கலைக் கழகத்தில் சிறப்பான பௌதிகப் பேராசிரியர் நிலை அளிக்கப் பெற்றார்; இரண்டாண்டுகள் அங்குப் பணியாற்றிய பின்னர் ஓராண்டு பிரேக் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக அமர்ந்தார்; மீண்டும் சூரிச்சில் ஒரு தொழில் நுணுக்கப் பள்ளியில் பேராசிரியரானார். 1914 ஆம் ஆண்டில் ஜர்மனி தேசத்தில் பெர்லின் என்னும் நகரில்

உள்ள விஞ்ஞானக் கழகத்தில் பேராசிரியர் வேலையை ஒப்புக்கொண்டு, அங்கிருந்த பௌதிக ஆராய்ச்சிக் கழகத்தில் இயக்குநராகவும் (Director) அவர் பணி யாற்றினர்.

1921 ஆம் ஆண்டில், அவர் கண்ட ஒரு புது தத்துவத்திற்காக அவருக்கு நோபெல் பரிசு அளிக்கப் பட்டது. இப்பரிசு சுமார் ஒரு லட்சம் ரூபாய் மதிப்புள் ளது. உலக முழுவதிலும் விஞ்ஞானம், மருத்துவம், இலக்கியம்; முதலிய துறைகளில் மிகச் சிறந்த அறிவாளி களாக இருப்பவர்களுக்கு அளிக்கப்படுகிறது. ஐன்ஸ்டைன் நோபெல் பரிசு பெற்றதால் அவரது புகழ் உலகமெங்கும் பரவியது. அதன் பிறகு அவருக்குக் கிடைத்த பட்டங்களும் பரிசுகளும் பாராட்டுகளும் மிகப் பலவாகும்.

இத்தகைய பெரியாருக்கு, இவரது தாய்நாடாகிய ஜர்மனியில் சர்வாதிகாரம் தாங்கி நின்ற ஹிட்லர் என்பவரால் இழைக்கப்பட்ட கொடுமை கேட்போரை நடுங்கச் செய்ய வல்லது. இவர் யூதர் மரபில் பிறந்தவர் என்ற ஒரே காரணத்திற்காக ஹிட்லர் இவரது பிரஜா உரிமையையும் சொத்துக்களையும் பறிமுதல் செய்துவிட்டார். அவரது கொடுங்கோலுக்கு அஞ்சி ஐன்ஸ்டைன் 1933ல் ஜர்மனியை விட்டு ஓடவேண்டியதாயிற்று. ஹிட்லர் அவரைப் பிடித்துத் தருபவர்களுக்கு 20000 மார்க்கு என்னும் ஜர்மன் நாணயங்களை அளிப்பதாக அறிவித் தார். ஆகையால் ஐன்ஸ்டைன் முதலில் பிரான்சுக்கும் பிறகு அங்கிருந்து பெல்ஜியத்திற்கும் இங்கிலாந்திற்கும் ஓடினர். இங்கிலாந்து அவருக்குப் புகலிடம் அளித்தது. அப்போது அமெரிக்காவில் நியூஜெர்ஸி என்னும் மாகா

ணத்தில் உள்ள பிரின்ஸ்டன் பல்கலைக் கழகம் அவருக்கு நிலையான பேராசிரியர் பதவியும் பாதுகாப்பும் அளித்து அழைத்துக்கொண்டது. ஆகவே, அவர் இறுதியாக அங்குச் சென்று தமது ஆராய்ச்சிகளை நடத்தி வந்தார். அவர் அங்குத் தமக்குக் கேட்ட ஊதியம் ஆண்டொன்றுக்கு 1250 பவுன்கள்தான்; ஆனால், அவருக்கு 5000 பவுன்கள் அளிக்கப்பட்டன.

1940 ஆம் ஆண்டில் அவர் அமெரிக்கப் பிரஜையானார். 1954ல் அவர் வேலையை விட்டு ஓய்வு பெற்ற பின்னரும் அங்கேயே கணிதம் பௌதிகம் முதலிய துறைகளில் நுட்பமான ஆராய்ச்சிகளைச் செய்து வந்தார்; அங்கேயே 1955 ஆம் ஆண்டு ஏப்ரல் 19 ஆம் நாள் உயிர் துறந்தார். அப்போது அவருக்கு வயது எழுபத்து ஆறு.

ஐன்ஸ்டைன் கண்டுபிடித்த உண்மைகளில் மிகவும் முக்கியமானவை சில. அவற்றுள் ஒன்று, பொருள்களின் சாதாரண மூன்று அளவுகளாகிய நீளம், அகலம், உயரம் (அல்லது கனம்) என்பவற்றுடன் காலம் என்னும் நான்காவது அளவு ஒன்றையும் சேர்த்தே பார்க்கவேண்டும் என்பது. காலத்தை நான்காவது அளவு என்று அவர் குறிப்பிட்டார். அது பொருள்களினின்று பிரிக்க முடியாதது. காலம் இன்றி எப்பொருளும் இல்லை. அது பொருள்களோடு இணைபிரியாத தொடர்புடையது.

அவர் கண்ட மற்றொரு உண்மை முன்பு நியூட்டன் என்பவர் கண்டுபிடித்த ஆகர்ஷணசக்திசம்பந்தமானது. பத்து வருட ஆராய்ச்சிக்குப்பின்னர் ஐன்ஸ்டைன் அதில் சில மாறுதல்களை வெளியிட்டார். அவர் எல்லாச் சக்தி

களையும் ஒருமைப்படுத்திக் காலத்துடனும் இடத்துட னும் இணைத்த புதுக் கொள்கைக்குத் தொடர்பு தத்துவம் (Theory of Relativity) என்று பெயர்.

அவர் கண்ட மூன்றுவது உண்மை, பொருளுக்கும் சக்திக்கும் உள்ள தொடர்பு பற்றியது. பொருள்கள் எல்லாம் சக்திக் கருவூலங்கள் என்றும் அவற்றினின்று சக்தியை வெளியிட முடியுமென்றும் அவர் கண்டார். ஒரு பொருளில் எவ்வளவு சக்தி அடங்கியிருக்கிறது என்று கண்டு பிடிக்க அவர் ஓர் எளிய சூத்திரத்தையும் தந்தார். இதை அவர் கண்டுபிடித்தது தான் அணுவில் உள்ள சக்தியை வெளிப்படுத்துவதற்கு அடிகோலியது. இரண்டாவது உலகப்போரின் இறுதியில் ஜப்பானில் மக்களைக் கொல்லும் அழிவு வேலைக்குப் பயன்பட்ட அணுகுண்டு அவரது ஆராய்ச்சியால் உண்டானதே. எனினும் இக்காலத்தில் அணுசக்தியைக் கொண்டு பல விதமான ஆக்க வேலைகளைச் செய்ய முடியும் என்றும் விஞ்ஞானிகள் கண்டிருக்கிறார்கள். அதனால் கப்பல்களை யும் விமானங்களையும் ஓட்டமுடியும், மின்சார சக்தியை உண்டாக்க முடியும். அதிக அளவில் உஷ்ணத்தை உண் டாக்கிக் கடல் நீரையும் சுத்தப்படுத்திப் பயிர்த் தொழி லுக்குப் பயன் படுத்திப் பாலைவனங்களையும் சோலை வனங்களாக்க முடியும் என்று பலவாறு விஞ்ஞானிகள் கருதுகிறார்கள். ஆகவே ஐன்ஸ்டைனை அணுயுகத்தின் தந்தையென்று கூறுவது பொருந்தும்.

ஐன்ஸ்டைன் உலக விஞ்ஞானிகளில் தலை சிறந்தவர். இது வரையில் மனிதன் மூளைக்கு எட்டாத பல செய்திகளை அவர் சிந்தித்தறிந்து கண்டுபிடித்து உலகத்தை வியப்பில்

ஆழ்த்தியவர். அவருக்கு ஆய்வுக்களம் அவரது மூளையே; ஆராய்ச்சிக் கருவிகள் அவரது சிந்தனையே. அவர் தமது மூளையாகிய ஆய்வுக் களத்தில் சிந்தனையால் கண்ட உண்மைகளை நன்கு புரிந்துகொள்ளவும் ஆற்ற லுடையவர்கள் உலகில் மிகச் சிலரே. வெறுஞ் சிந்தனை யினால் மட்டும் எவ்வளவு சாதிக்கலாம் என்பதற்கு அவ ரது வாழ்க்கை ஒரு சிறந்தஎடுத்துக்காட்டாகும். அவரது தொடர்பு தத்துவமானது. சென்ற 2000 ஆண்டுகளில் மக்கள் பெற்ற கணித அறிவையும் பௌதிக அறிவை யும் சுருக்கிச் சாரமாகத் தந்திருக்கிறது என்று மற்றொரு பெரிய மேதையாகிய பெர்ட்ரண்டு ரஸ்ஸல் என்பவர் கூறுகிறார்.

ஐன்ஸ்டைன் அமைதியும் அடக்கமும் மிக்கவர்; சலியாத உழைப்பும் தளராத ஊக்கமும் உடையவர்; சிறிதும் ஆடம்பரமில்லாதவர்; எளிய குழந்தை உள்ளம் படைத்தவர். விஞ்ஞான ஆராய்ச்சியின் முடிவுகளை மக்கள் நலனுக்கே பயன்படுத்த வேண்டுமென்று அவர் விரும்பியும் பேசியும் வந்தார். மக்கள் மீது அவருக்கு அளவு கடந்த அன்பு உண்டு. தெய்வ நம்பிக்கையும் உண்டு. மக்கள் சமூகத்தில் உள்ள வேறுபாடுகளை நீக்கி எல்லாருக்கும் சம உரிமைகள் அளிக்கப்பட வேண்டும் என்று அவர் வாதாடினார்.

ஒரு சமயம் வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்கு வழி என்ன என்று ஒருவர் கேட்டதற்கு அவர், "வேலை, விளையாட்டு, வாயை மூடிக்கொண்டிருத்தல் இம் மூன்றுமே வெற்றியளிக்கும்," என்று கூறினார். மற் றொரு சமயம், "நான் செய்ததைப் பற்றி மிகைப்படுத்தி

என்னைப் புகழ்கிறார்கள். ஆனால் உண்மையில் விஞ்ஞானமே எனக்கு அழகாகத் தோன்றுகிறது. வாழ்க்கை முழுவதுமே விஞ்ஞானத் துறையில் உழைப்பது ஒரு பெரும்பேறு என்று நான் கருதுகிறேன்.'' என்று அவர் கூறியதிலிருந்து, அவரது அடக்கமும், விஞ்ஞானத்தின் மீது அவருக்கிருந்த அளவுகடந்த ஆர்வமும் புலனாகின்றன.

இத்தகைய பெரியார் இறந்தபோது உலகப் பெருந் தலைவர்கள் அனைவரும் வருந்தி இரங்கினார்கள்; உலகம் தந்த இணையற்ற மேலோர் என்று அவரைப் புகழ்ந்தார்கள்; அவரை அறிவு வானில் மங்காது ஒளிவிட்டு மிளிரும் நாள்மீன் என்று கொண்டாடினார்கள்.

## கேள்விகள்

1. ஐன்ஸ்டைன் எங்குக் கல்வி கற்றார்?
2. ஹிட்லர் அவருக்கு இழைத்த கொடுமை யாது?
3. அவர் கண்டுபிடித்த தத்துவங்களின் பெயர்கள் என்ன?
4. அவரை அணுயுகத்தின் தந்தை என்று கூறுவது எப்படிப் பொருந்தும்?
5. பெர்ட்ரண்டு ரஸ்ஸல் அவரது தொடர்பு தத்துவத்தைப் பற்றிக் கூறியது என்ன?
6. ஐன்ஸ்டைனின் பண்புகளைத் தொகுத்துக் கூறுக.

## *பயிற்சி*

**கோடிட்ட இடங்களை நிரப்புக:—**

இந்த நூற்றாண்டை ———— என்று கூறலாம். காலம் என்பது பொருள்களின் ——— அளவாகும்.

தொடர்பு தத்துவம் என்பது — இணைத்ததேயாகும் பொருள்கள் — கருவூலங்களே. ஐன்ஸ்டைனுக்கு அவரது —— ஆய்வுக்களம்; —— ஆராய்ச்சிக் கருவிகள்.

## அருஞ்சொற்பொருள்

மேலோர் — சிறந்த அறிவாளி; புகலிடம் — தங்குவதற்குப் பாதுகாவலான இடம்; அடி கோலுதல் — அடிப்படை இடுதல்; ஆய்வுக்களம் — சோதனைச்சாலை; நாள்மீன் — நட்சத்திரம்; மிளிரும்—விளங்கும்; கருவூலம் — பொக்கிஷம்.

# 7. உறங்கும் அழகி

நெடுங்காலத்திற்கு முன்னர் ஓர் அரசனும் அரசியும் தமக்குக் குழந்தை இல்லையே என்று வருந்தி அதற்காகத் தானம், தவம் முதலியவை செய்து ஓர் பெண் மகவைப் பெற்றெடுத்தார்கள். அவர்கள் அம்மகவைக் கண்டு எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தார்கள்.

இந்த அரசனது அரண்மனையினருகில் பல தேவதைகள் அடிக்கடி வந்து போவதுண்டு. தனக்கு குழந்தை பிறந்த நாளில் அரசன் அத்தேவதைகளைப் பார்த்து, "எனக்கு ஒரு பெண்ணழகி பிறந்துள்ளாள்; அவளைக் கண்டு மகிழ்ந்து வாழ்த்திச் செல்லுங்கள்," என்று வேண்டிக்கொண்டான்.

அத்தேவதைகளில் ஒருத்தி மிகக் கொடியவள். அவள் குழந்தை பிறந்த நாளன்று அரண்மனையருகில் வராமையால் அரசன் அவளை அழைக்கவில்லை. அதற்காக அவள் அவன் மீது சினந்து, "என்னை அரசன் அழைக்கவில்லையல்லவா? ஆகையால் நான் அக்குழந்தைக்கு ஒரு சாபம் இடப்போகிறேன்," என்றாள். மற்ற நல்ல தேவதைகள் எல்லாரும் குழந்தையைக் கண்டு வாழ்த்தி அதற்கு ஒவ்வோர் வரம் அளித்தார்கள். ஒருத்தி அக்குழந்தைக்குப் பெருஞ்செல்வம் உண்டாக வேண்டுமென்றும், மற்றொருத்தி அதற்கு எல்லா நற்குணங்களும் அமைய வேண்டுமென்றும், பின்னுமொருத்தி அது அதிக அறிவோடு விளங்கவேண்டுமென்றும் அருளிச் சென்றனர். அக்கொடிய தேவதை மட்டும்

அதற்கு ஓரு சாபம் இட்டாள்; அஃது என்னவென்ருல் அவள் தனது பதினைந்தாவது வயதில் தன் கையில் ஓர் ஊசி குத்த அதனுல் இறக்கக் கடவள் என்பது.

இதைக் கேட்ட அரசன் மற்றத் தேவதைகளைப் பார்த்து, "என்னருமை மகள் சாகாமலிருக்க நீங்கள் அருள் புரியமாட்டீர்களா?" என்று மனம் வருந்திக் கேட்டுக்கொண்டான். அதற்கு அவர்கள் மனம் இரங்கி, "உன் மகள் ஊசியால் குத்திக்கொண்டவுடன் இறந்து விடாமல் நீண்ட உறக்கத்தில் ஆழ்ந்துவிடுவாள்" என்று அருளினர்; அன்றியும், "அவள் நூறு வருடங்கள் உறங்கிய பின்னர் ஓர் அரசகுமாரன் வந்து அவளைத் தொட, அவள் விழித்துக்கொள்வாள்," என்றும் கூறினர்.

பிறகு அரசன் தன் அரண்மனையிலிருந்த ஊசிகளை யெல்லாம் கொண்டுவரச் செய்து ஓர் ஆற்றில் எறிந்து விட்டான். அன்றியும் இனி அரண்மனைக்குள் யாரும் ஓர் ஊசியையும் கொண்டுவரக் கூடாது என்று கட்டளை இட்டான்; அப்படி யாரேனும் ஊசியைக் கொண்டு வந்தால் அவர்களைக் கொன்றுவிடுவதாகவும் அறிவித்தான்.

அரசனது மகள் வளர்ந்து பதினைந்து வயதுடைய பேரழகியானுள். ஒரு நாள் அவளது பெற்ருேர்கள் வெளியே சென்றிருந்தார்கள். அப்போது அவள் அக்கம் பக்கம் சென்று அங்குள்ள காட்சிகளைக் காண விழைந்தாள். பூஞ்சோலைகளில் உள்ள பூக்களின் அழகையும் செடிகளின் அமைப்பையும் காண விரும்பி அவள் வெளியே சென்ருள்; பிறகு அரண்மனையில் உள்ள

எல்லா அறைகளிலும் நுழைந்து பார்த்தாள். ஒரே ஒரு அறையில் மட்டும் அவள் அதுவரையில் நுழைந்த தில்லே. அதிலும் போய்ப் பார்க்க அவள் ஆவலுற்று உள்ளே நுழைய அங்கே ஒரு கிழவியைக் கண்டாள். அவள் ஓர் ஊசியால் ஓர் ஆடையைத் தைத்துக்கொண் டிருந்தாள். அதைக் கண்ட இளவரசி, அவளருகில் சென்று, அது வரையில் ஊசியைக் கண்டதில்லையாகை யால், ஆவலுடன் அதைக் கேட்டு வாங்கிக்கொண்டு அவ்வாடையைத் தைக்கலானுள். அவ்வளவுதான்; ஊசி கையில் குத்திவிட்டது. உடனே அவள் உறங்கிவிட்டாள். அந்தக் கிழவி அவளேச் சபித்த அக்கொடிய தேவதையே யன்றி வேறு யாருமல்லள். இவ்வாறு அத்தேவதை தன் சாபத்தை நிறைவேற்றினுள்.

இளவரசி உறங்கிய உடன் அரண்மனேயில் இருந்த அனேவரும் உறங்கிவிட்டனர். அரசனும் அரசியும், மற்ற அனேவரும் அவரவர்கள் இருந்த இடத்திலேயே உறங்கி விட்டார்கள். பிறகு ஒரு தேவதை வந்து அரண்மனே யைச் சுற்றிக் காடுபோல் மரங்கள் வளருமாறு செய்து, இளவரசியை ஒரு மெத்தையின் மீது வைத்துவிட்டுப் போய்விட்டாள். மரங்கள் நெருக்கமாக வளர்ந்து விட்ட தால் ஒருவரும் அரண்மனேக்குள் நுழைய முடியவில்லே. பல ஆண்டுகள் அந்த அழகி உறங்கியவண்ணம் இருந் தாள். மற்றும் உள்ளே இருந்த அனேவரும் உறங்கிக் கொண்டேயிருந்தனர். ஆண்டுகள் கழியக் கழிய அவ்

வரண்மனையில் யார் இருக்கிருர்கள் என்றுகூட வெளியில் இருந்த மக்களுக்குத் தெரியாமல் போய் விட்டது. அரண்மனைகூடத் தெரியாமல் மரங்களுக் கிடையில் மறைந்துவிட்டது.

நூறு வருடங்கள் சென்ற பின்னர் ஒருநாள் ஓரரசன் காட்டுவழியே தன் மகனுடன் குதிரைமீதேறி வந்து கொண்டிருந்தான். காட்டில் அரசனும் அவனது பரிவாரங்களும் நெடுந்தூரம் முன்னுல் சென்றுவிடவே, அரசிளங்குமாரன் பின்தங்கிவிட்டான். குதிரை மீது ஏறியவண்ணம் அவர்களைத் தேடிக்கொண்டு வருகை யில் அவன் உறங்கும் அழயின் அரண்மனையினருகே வந்தான். அங்கு வந்ததும் மரங்கள் அடர்ந்திருந்ததைக் கண்டு அவன், "என் தந்தை இங்குத்தான் சென்றிருக்க வேண்டும்; நானும் உள்ளே நுழைந்து போய்ப் பார்க் கிறேன்," என்று எண்ணி உள்ளே சென்ருன். அப் போது அவனுக்கு, மரங்கள் விலகி விட்டன. பிறகு அரண்மனை வாயிலையடையக் கதவும் தானுகவே திறந் தது. கதவருகில் காவற்காரன் நின்ற வண்ணம் உறங்கிக் கொண்டிருந்ததைக் கண்டான். உள்ளே நுழைந்ததும் சிலர் கையில் உணவுடன் உறங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தான்; ஒரு சிறுவன் படிப்பதற்காக உட்கார்ந்த வண்ணம் தூங்குவதைக் கண்டான். ஒரு பெண் ஒரு செருப்பைக் கையில் வைத்துக்கொண்டும் மற்ருெரு செருப்பைக் காலில் அணிந்துகொண்டும்அசையாதுநிற் பதைக் கண்டான். எங்கும் அதிகப் புழுதி படிந்திருந்தது. அவன் ஒவ்வோர் அறையிலும் நுழைந்து பார்த்தான். ஓர் அறையில் அரசனும் அரசியும் தூங்கிக்கொண்டிருந் தனர். மற்ருேர் அறையில் நுழைந்து அங்கு ஒரு சாள

ரத்தின் வழியே சூரிய ஒளி வந்து ஒரு மெத்தை மீது விழுந்துகொண்டிருப்பதை அவன் கண்டான். அம்மெத்தைமீது ஒரு பேரழகி படுத்துக்கொண்டிருந்தாள். அருகிற் சென்று பார்த்து அவள் உறங்குவதை அவன் அறிந்தான். பிறகு அவளை அவன் மெல்லத் தொட்டு எழுப்பினன். உடனே அவள் கனவிலிருந்து கலைக்கப்பட்டு எழுந்தவள் போலத் திடீரென்று எழுந்தாள். அரண்மனையிலிருந்த அரசன் அரசி முதலானவர்களும் எழுந்துவிட்டனர். அரசி அரசனைப் பார்த்து, "நீங்கள் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தீர்கள்; நான் உறங்கிவிட்டேன்," என்ருள். ஒவ்வொருவரும் இப்படியே கனவிலிருந்து விழித்தவர்போல் எழுந்து, முன்பு பேசிக்கொண்டிருந்த பேச்சை நினைவு படுத்திக்கொண்டனர்; அல்லது முன் செய்துகொண்டிருந்த செயலைத் தொடர்ந்து செய்தனர்.

இளவரசி எழுந்தவுடன் தன் கையிலிருந்த ஊசியும் துணியும் மறைந்துவிட்டதைக் கண்டாள். அரசனும் அரசியும் ஆவலுடன் அவளருகில் ஓடோடியும் வந்தனர். அவர்கள் அவளுக்கு நேர்ந்த பேராபத்தைக்கண்டுவருந்தியும், அவள் அதிலிருந்து தப்பித்துக்கொண்டதற்கு மகிழ்ந்தும் உவகைக் கண்ணீர் பொழிந்தனர். கொடிய தேவதை சொன்ன சாபம் நிறைவேறியதும், அதை மற்றத் தெய்வங்கள் மாற்றியருளியதையும் எண்ணி அவர்கள் வியப்பெய்தினர்; இறுதியில் அவளை அரசிளங்குமரனுக்கே மணம் புரிந்து வைத்தனர். அவ்விருவரும் பிறகு அரசியும் அரசனும் ஆகி இன்புற்று வாழ்ந்து வந்தனர்.

## கேள்விகள்

1. நல்ல தேவதைகள் குழந்தைக்கு என்னென்ன வரங்கள் அளித்தனர்?

2. கொடிய தேவதை ஏன் குழந்தைக்குச் சாபமிட்டாள்?

3. கொடிய தேவதையின் சாபத்தை நல்ல தேவதைகள் எப்படி மாற்றினர்?

4. கொடிய தேவதையின் சாபம் எப்படி நிறைவேறியது?

5. அரசிளங்குமரன் உறங்கும் அழகியின் அரண்மனைக்குள் ஏன் சென்றான்?

6. அவன் அங்குக் கண்ட காட்சிகள் எவை?

7. நல்ல தெய்வங்களின் வாக்கு எப்படி நிறைவேறியது?

## பயிற்சி

1. இக்கதையை உறங்கும் அழகி கூறுவதுபோல 20 வரிகளில் சுருக்கிக் கூறுக.

2. எதிர்ப்பதம் கூறுக: சாபம், தேவதை, அரசன், அரசிளங்குமரன், இளவரசன், திறந்தது, உறங்கு, அழகு.

3. பிரித்தெழுதுக: பேராபத்து, இளவரசன், அரசிளங்குமரன், பேரழகி, வேறொருத்தி, காவற்காரன், எல்லையற்ற, ஆவலுற்று.

## அருஞ் சொற்பொருள்

மகவு — குழந்தை; விழைந்தாள் — விரும்பினாள்; உவகை — மகிழ்ச்சி; சாளரம் — ஜன்னல்; பரிவாரங்கள் — சுற்றிலும் வருபவர்கள்.

# 8. துருவப் பயணம்

பூமி உருண்டையில் ஊடுருவும்படி நடுவே 23 டிகிரி சாய்வாக ஒரு கோடு வரையப்பட்டால், அதுவே பூமியின் அச்சு என்றும், அதைச் சுற்றிப் பூமியானது தன்னைத் தானே சுற்றிக்கொள்கிறது என்றும் நீங்கள் அறிவீர்கள். அவ்வச்சின் வடக்கு நுனியும் தெற்கு நுனியும் முறையே பூமியின் வடதுருவம் என்றும் தென்துருவம் என்றும் சொல்லப்படும். இவ்விரு துருவங்களையும் பூமியின் முனைகள் என்றும் கூறலாம்.

இவை ஆண்டு முழுவதும் பனி மூடியிருக்கும் பகுதிகள். அங்கே பெரும்பனிப் பாறைகளும் பனிப்புயல்களும் எப்பொழுதும் காணப்படும். பாசிகள் தவிர வேறு தாவரங்கள் அங்கே இல்லை. திமிங்கிலங்கள், நீர் நாய்கள், கலைமான்கள், துருவக் கரடிகள், பெங்குவின் என்னும் பறவைகள் முதலிய உயிரினங்கள் மட்டும் அங்கு அடிக்கடி காணப்படுகின்றன.

வடதுருவப் பகுதி ஆர்க்டிக் பிரதேசம் எனப்படும். அது 63½ டிகிரி வட அட்சத்திற்கு அப்பால் உள்ளது. அங்கு ஒரு வருடத்தில் ஒரு நாள் முழுவதும் சூரியன் மறைவதே இல்லை; மற்றொரு நாள் முழுவதும் அது தோன்றுவதே இல்லை. வடதுருவத்தில் ஆறுமாதங்கள் தொடர்ந்து இரவாகவும் பிறகு ஆறு மாதங்கள் தொடர்ந்து பகலாகவும் இருக்கும். சூரிய ஒளியானது


வட துருவம்
வட அமெரிக்கா
அட்லாண்டிக்
பசிபிக் மகா
சமுத்திரம்
தென் அமெரிக்கா
தென் துருவம்


வட துருவம்
ஐரோப்பா
ஆசியா
ஆப்ரிக்கா
மகா சமுத்திரம்
இந்து
மகா சமுத்திரம்
ஆஸ்திரேலியா
அண்டார்டிக்
தென் துருவம்

இத்துருவப் பகுதியில் சிலசமயங்களில்பல நிறங்களோடு மிக அழகாகக் காட்சியளிக்கும்; சில நாட்கள் வரை தொடர்ந்து இக் காட்சியானது வானத்தில் கண்ணைக் கவர்ந்துகொண்டிருக்கும். பல நிறங்களாலாகிய ஒரு திரை தொங்கவிடப்பட்டது போலவும், வட்டமாகவும், வட்டத்தின் குறுக்கேயும் நெடுக்கேயும் கோடுகள் அமைந்தும், இன்னும் பலவாறு இக்காட்சிகள் அடிக்கடி உண்டாகும். இதற்குக் காரணம் துருவப் பகுதியில் பூமிக் காந்தத்தின் சக்தி அதிகமாகப் பரவியிருப்பதும் அதனுல் சூரிய ஒளி மாறுதலடைவதுந்தான் என்று கருதப்படுகிறது. இக்காட்சிகளை வட அமெரிக்காவின் வட பகுதியில் உள்ளவர்கள்கூட அடிக்கடி கண்டு களிக்க முடிகிறது.

இயற்கையின் மறைவிடங்களாகக் கருதப்படும் இப்பகுதிகளை மனிதன் கண்டறிய வேண்டுமென்னும் அவாவினுல், பல இன்னல்களை மேற்கொண்டு, அங்குச் சென்ற வரலாறு மிகவும் சுவையுடையது.

வட துருவத்தைக் காண அரை நூற்றுண்டுக்கு மேலாகப் பல முயற்சிகள் செய்யப்பட்டன. நார்வே தேசத்தைச் சேர்ந்த நான்சென் என்பவர் 1893 முதல் 1896 வரை மேற்கொண்ட ஒரு பெரிய ஆராய்ச்சிப் பயணம் இங்கே குறிப்பிடத்தக்கது. அவர் ஐரோப்பா, ஆசியா ஆகிய கண்டங்களின் வடகடற்கரையோரமாகப் புது சைபீரியத் தீவுகளை நோக்கிக் கப்பலில் சென்ருர். அப்போது அவரது கப்பல் பனி உறைந்த கடலில் அகப்பட்டுக்கொண்டுவிட்டது. 1896ஆம் ஆண்டில் அவர், கப்பல்கள் செல்ல முடியாத பனி உறைந்துள்ள கடற்

பகுதிகளில் மூன்று வார காலம் காலால் நடந்துசென்று 86 டிகிரி வட அட்சம் வரை சென்றார். அப்போது அவர் குளிராலும் பனியாலும் கடுங்காற்றினாலும் அடைந்த துன்பத்திற்கு அளவில்லை. எனினும் அவர் பல இன்னல்களையும் மேற்கொண்டு மனம் தளராது பெருவெற்றியுடன் திரும்பினார். வட துருவத்தை யடைய இன்னும் 4 டிகிரி அட்சம்தான் இருந்தது; அவருக்கு முன்பு அதுவரையில் ஒருவரும் அவ்வளவு தூரம் சென்றதே இல்லை.

1905 ஆம் ஆண்டில் பியரி என்னும் வீரர் 87 டிகிரி வட அட்சம் வரை சென்றார். அவரே மீண்டும் 1909 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ஆம் நாள் 90 டிகிரி அட்ச மாகிய வட துருவத்தையே அடைந்துவிட்டார். அவர் கடலின்மேல் மூடியிருந்த பனியின்மீது நாய்களால் அல்லது கலைமான்களால் இழுக்கப்படும் ஸ்லெட்ஜ் என்னும் ஒரு வகைச் சக்கரமில்லாத வண்டியில் சென்று அவ் விடத்தையடைந்தார். அமெரிக்காவைச் சேர்ந்த பையர்டு என்பவர் 1926 ஆம் ஆண்டில் வடதுருவத் தின் மீது விமானத்தில் பறந்து பார்த்தார். 1929 இல் அவரே தென் துருவத்தின் மீதும் பறந்து பார்த்தார்.

இப்பொழுது சோவியத் (ரஷிய) அரசாங்கம் வட துருவப் பகுதி ஆராய்ச்சிக்காகவே ஒரு தனி இலாகா ஏற்படுத்தி அதன் உதவியால் வானிலை நிலையங்களும் வானொலி நிலையங்களும் அங்கே ஏற்படுத்தியிருக்கிறது. 1937 ஆம் ஆண்டில் சோவியத் அரசாங்கம் வட துருவத்தின் மீதிருந்த ஒரு பனிப் பாறையின் மேல் ஒரு ஆராய்ச்சி நிலையத்தை அமைத்தது.

தென் துருவப் பகுதி 63½ டிகிரிக்குத் தெற்கில் உள்ளது. அது அண்டார்க்டிக் பகுதி எனப்படும். அங்கும் எப்பொழுதும் கடலானது பனிப் பாறைகளால் மூடப்பட்டிருக்கும். அக்கடலைத் தாண்டிச் சென்ருல் அண்டார்க்டிக் நிலப்பகுதி இருக்கிறது. அந்த நிலப் பகுதியும் எப்பொழுதும் பனியால் மூடப்பட்டிருக்கும். அது 6000 முதல் அடி 10000 அடிவரை உயரமாக உள்ள ஒரு பீடபூமிப் பிரதேசம். (வட துருவத்தில் நிலமே இல்லை என்பதும், அது பனிக்கட்டியாக உறைந்துள்ள கடற் பகுதியே என்பதும் இங்குக் கவனிக்கத்தக்கன) தென்துருவப் பகுதி ஐரோப்பாவைவிடப் பெரியது; மலைத் தொடர்களால் ஆனது. அதன் கடற்கரைப் பகுதியில் பனிப்பாளங்கள் நெடுந்தூரம் கடல் பக்கமாக நீட்டிக்கொண்டிருக்கும். அக்கடற் கரையின் நீளம் 14000 மைல். அப்பகுதியில் கிழக்கிலிருந்து தென் கிழக்கிலிருந்தும் மிகக்குளிர்ந்த பனிப்புயல்கள் மணிக்கு 15 மைல் வேகத்தில் வீசிக்கொண்டே இருக்கும்; ஏதோ இரண்டோரிடங்களில் மழையானது நீராகச் சிறிது பெய்யும். மற்ற இடங்களில் மழை பனியாகத்தான் பெய்யும். பீடபூமியின் உயரமான பகுதிகளிலிருந்து பனியாறுகள் பெருகிக் கடலில் வந்து கலக்கும்.

இப்பகுதியை ஆராயக் காப்டன் ஸ்காட் என்னும் ஆங்கிலேயர் லண்டனிலிருந்து முதலில் 1901-ஆம் ஆண்டில் புறப்பட்டார். ஆறுமாதம் கப்பலில் தென்துரு வத்தை நோக்கிச் சென்ற பின்னர் தென்கடலில் கடல் நீர் உறைந்துவிட்டதால் அவரது கப்பல் மேலே செல்ல முடியவில்லை. ஆகையால் அவரது குழுவினர் கோடைக்

காலம் வரும் வரையில் காத்திருந்து பிறகு ஸ்லெட்ஜ் களில் நெடுந்தூரம் சென்றார்கள். குளிர் மிகுதியால் ஸ்லெட்ஜகளை இழுத்த நாய்கள் இறந்துவிட்டன. குழு வினரும் குளிர் தாங்க முடியாமல் நோயுற்றனர். அவர் கள் மேலே செல்ல மறுத்ததால் ஸ்காட் வெற்றி காணு மல் திரும்ப வேண்டியதாயிற்று.

மீண்டும் அவர் 1911 இல் தென் துருவத்தைக் காணப் புறப்பட்டார். இந்த முறை அவர் மிகவும் மன உறுதி யுடனும் முன்னேற்பாடுகளுடனும் சென்றதால், ஆறு மாத காலம் அரிய பயணத்தை மேற்கொண்டு தென் துருவத்தை அடைந்தார். குதிரைகளையும், நாய்களையும் ஸ்லெட்ஜ்களில் பூட்டி, அவர் அங்குச் சென்றார். சென்ற வுடன் அவரது மகிழ்ச்சிக்கு எல்லையும் உண்டோ? தென் துருவத்தில் கண்ட காட்சிகளையெல்லாம் அவர் தமது நாட் குறிப்புப் புத்தகத்தில் குறித்துக்கொண்டார்; பிறகு மட்டற்ற மகிழ்ச்சியோடு திரும்பினர்.

ஆனால், அந்தோ! திரும்பும்போது உணவும் எரி பொருள்களும் இன்மையால் அவரும் அவரது குழுவின ரும் உயிர் துறக்க வேண்டியதாயிற்று. ஸ்காட் தம் இறு திக் காலத்தில் எழுதிவைத்த குறிப்புப் புத்தகம் பல நாட் களுக்குப் பிறகு கண்டெடுக்கப்பட்டது. அதில் அவர் சாகும் தறுவாயில் தம் நாட்டு மக்களுக்கென்று எழுதி வைத்திருந்த குறிப்புப் பின்வருமாறு: "நாங்கள் நான்கு நாட்களாக உணவின்றி வாடுகின்றோம். குளிரும் காற்றும் உடலை விறைக்கும்படி செய்துவிட்டன. உடல் சோர்ந்துவிட்டது; எழுதுவதற்கும் கையில் வலிமை

இல்லை நாங்கள் இறக்கப்போவது உறுதி. எங்கள் அனுபவங்களையும் நாங்கள் கண்ட காட்சிகளையும் உங்களுக்குச் சொல்ல வேண்டுமென்று நான் துடிக்கிறேன்! உயிருடன் இருந்தால் சொல்கிறேன்.''

ஸ்காட் இறந்த செய்தி உலகத்தைத் துயரில் ஆழ்ந்தியது. இரும்பு நெஞ்சம் படைத்த வீரர் ஒருவர் திக்கற்ற நிலையில் உணவின்றி மனமிரங்கி வாடிக் கண்ணீர் வடித்து இறந்ததைக் கேட்டு யார்தான் துயரங்கொள்ள மாட்டார்கள்? உலகத்தில் மறைபொருளாக இருக்கும் பல செய்திகளை மக்களுக்குத் தாம் கண்டு அறிவிக்க வேண்டுமென்னும் அவாவினுல் தம் உயிரையும் துரும்பாக எண்ணிய இத்தகைய தன்னலமற்ற தியாகிகளின் வரலாற்றைப் படிப்பதும் மிகவும் பயனுடையதன்றோ? அவர்கள் கண்டு குறித்துக் கொண்டுவந்த செய்திகளைத் தான் நாம் இந்தப் பாடத்தில் படித்தோம்.

## கேள்விகள்

1. வட துருவத்தில் காணப்படும் காட்சிகளை விவரிக்க.
2. நான்சென் சாதித்தது என்ன?
3. இறுதியாக யார் எப்பொழுது எப்படி வட துருவத்தை அடைந்தார்கள்?
4. தென் துருவப் பகுதியின் அமைப்பை விவரிக்க.
5. ஸ்காட் எப்பொழுது எப்படித் தென் துருவத்தைக் கண்டார்?
6. இறுதியாக ஸ்காட்டுக்கு என்ன நேர்ந்தது? ஏன்?

## பயிற்சி

சரியாகப் பொருத்துக:—

| | |
|---|---|
| நான்சென் | வட துருவம் கண்டுபிடிக்கப்பட்டது. |
| 1909 ஆம் | விமானத்தில் துருவங்களின் மீது பறந்தார். |
| ஆண்டில் | 1905 இல் 87° வட அட்சம் அடைந்தார். |
| பியரி | தென் துருவத்தைக் கண்டார். |
| தையர்டு | 86° வட அட்சம் வரை சென்றார். |
| ஸ்காட் | |

## அருஞ்சொற்பொருள்

அட்சம்—அட்சரேகை. வானிலை நிலையம்—வானத்தில் உண்டாகும் மழை, காற்று, ஈரம் முதலியவற்றைக் கண்டறிந்து கூறும் இடங்கள்; பாளம்—பெரிய கனமான பாறைகள்; குழு—கூட்டம்; எரிபொருள்—எண்ணெய், கரி, விறகு முதலியன; தறுவாய்—சமயம்.

———

# 9. ராபர்ட் கால்டுவெல்

அயல் நாட்டினர் பலர், நம் நாட்டிற்கு வந்து நமது மொழி, இலக்கியம், கலை முதலியவற்றைக் கற்றுச் சில துறைகளில் குறிப்பிடத் தகுந்த தொண்டுகளையும் ஆற்றி யிருக்கிறார்கள். அவர்களுள் ராபர்ட் கால்டுவெல் என்பவரும் ஒருவர். ஐரோப்பியராய் இருந்தும் தமிழ்நாட்டிற்கு வந்து தமிழரோடு தமிழராய் வாழ்ந்து தம் வாழ்நாளில் தமிழுக்குப் பெருந்தொண்டு புரிந்த இப்பெரியாரது வரலாற்றினை நாம் அறிவது நமது கடமையன்றோ?

இவர் சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் அயர்லாந்து தேசத்தில் உள்ள ஓர் சிற்றூரில் பிறந்தார். இவருக்குப் பத்து வயதில் இவரது பெற்றோர்கள் ஸ்காட்லாந்திற்குச் செல்லவே, இவரும் அங்குச் சென்று உயர்தரக் கல்வி கற்றார். பிறகு இவருக்கு ஓவியத்தில் இயற்கையாகவே அதிகத் திறமை இருந்ததால், பெற்றோர்கள் இவரை ஓர் ஓவியக் கலைப் பள்ளியில் சேர்த்



ராபர்ட் கால்டுவெல்

தனர். இவர் ஓவியத்தில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தும் அத்துறையில் சென்று பணியாற்ற விரும்பாது, சமயப் பணி ஆற்றவே சாலவும் விரும்பினர். ஆகவே இவர் தம் இருபதாம் வயதில் லண்டன் மாநகரில் உள்ள சமயத் தொண்டர் சங்கத்தில் சேர்ந்தார். அச்சங்கத்தார் இவரை மேற்படிப்புக்காகக் கிளாஸ்கோப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பினர்கள். அங்கு இவர் படித்துப் பி. ஏ. பட்டத் தேர்வில் முதன்மையாகத் தேறினர். பிறகு தென் தமிழ் நாட்டில் கிறித்துவ சமயத் தொண்டு புரிவதற்கு லண்டன் சமயத் தொண்டர் சங்கம் இவரைத் தேர்ந்தெடுத்தது.

அக்காலத்தில் தம் தாய் நாட்டை விட்டுப் பல்லாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள இந்தியா போன்ற அயல் நாடுகளுக்குச் சமயத் தொண்டு புரிய யாரும் முன் வருவது அரிது. ஆனல்நம் கால்டுவெல்லோ, இறைவன் மீதும் சமயத்தின் மீதும் இருந்த அளவற்ற பற்றின் காரணமாக இந்தியாவிற்குச் செல்லத் தயங்காது உடனே ஒருப்பட்டார். அவர் இங்கிலாந்திலிருந்து, பெற்ருேரிடம் பிரியாவிடை பெற்றுப் புறப்பட்டு, நான்கு மாத காலம் மரக்கலத்தில் பிரயாணம் செய்து சென்னையை அடைந்தார்; கலத்தில் வரும்போதே பிரௌன் என்னும் பெயருடைய அரசாங்க அதிகாரி ஒருவரிடம் நட்புக்கொண்டு, அவர் வாயிலாக வடமொழியை நன்கு கற்ருர்; பிறகு சென்னையிலிருந்து தென் பாண்டி நாட்டிற்கு வந்து திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள திசையன்விளை சரகத்தில் சமயத் தொண்டாற்றுவதற்கு அமர்ந்தார். அங்குள்ள இடையன்குடி என்னும் சிற்றூர்தான் அவரது இருப்பிடமாக இருந்தது.

இடையன்குடி என்பது செம்பை உருக்கி வார்த்தாற்போன்ற சிவந்த கட்டாந்தரையில் அமைந்த ஊர். அங்குப் பனைமரங்கள்தான் அதிகம் பயிராகும். வேறு செடிகொடிகளோ செழிப்பான மரங்களோ இல்லை. அதைப் பாலைவனம் என்றே சொல்லலாம். அத்தகைய பாழான ஊரை அவர் முதல் முதல் சீர்படுத்திச் செம்மையான சாலைகள், நன்முறையில் அமைந்த வீடுகள், சாலையோர மரங்கள் முதலியவற்றை உண்டாக்கினர்; குடிசைகளைத் திருத்தி நல்ல வீடுகளாக மாற்றினர். பள்ளிக்கூடம் ஒன்றை நிறுவி முதல் முதலாகப் பெண்களும் கல்வி பயில வழி செய்தார். ஓர் அழகான கிறித்தவக் கோயிலையும் கட்டி முடித்தார். அப்போது சென்னைக் கவர்னராக இருந்த நேபியர் பிரபு இடையன்குடிக்கு வந்து கால்டுவெல்லின் விருந்தினராகத் தங்கியிருந்து தொண்டினைக் கண்டு பாராட்டினர்.

கால்டுவெல் ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ்நாட்டிலேயே வாழ்ந்து,தமிழராகவே ஆய்விட்டார்; தமிழ் மொழியை நன்கு கற்று அதில் ஆராய்ச்சிகளையும் நடத்தினர்; அதுமட்டுமன்றித் தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, குடகு முதலிய தென்னாட்டு மொழிகளையும் செவ்வனே கற்று அவற்றிலும் ஆராய்ச்சிகள் செய்தார். அவர் தென்னாட்டு மொழிகளை யெல்லாம் ஒப்பு நோக்கி ஆராய்ந்து, "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்'' என்னும் ஓர் அரும்பெரு நூலை ஆங்கிலத்தில் இயற்றினர். தென்னாட்டு மொழிகளையே அவர் திராவிட மொழிகள் என்று குறிப்பிட்டார்; அவையெல்லாம் ஓரினம் என்றும், அவற்றுள் தமிழே மிகவும் மூத்தது, சிறந்தது, ஒப்புயர்வற்றது என்றும் அவர்

வலியுறுத்தி நிலைநாட்டினர். அவருக்கு முன் ஒருவரும் இம்முறையில் தென்னாட்டு மொழிகளை ஒப்பிட்டு ஆராய்ந்ததில்லை; அவற்றின் ஒப்பிலக்கணத்தையும் எழுதியதில்லை; ஆகவே அவர் 'திராவிடமொழி ஒப்பிலக்கணத்தின் தந்தை' என்று சிறப்பித்துக் கூறியிருக்கிறார்.

அவர், தம் ஒப்பிலக்கணத்தில் சில அரிய கருத்துக்களைக் கூறியிருக்கிறார். 'தமிழ் உயர்தனிச் செம்மொழி' என்னும் கருத்தை அவர் முதல் முதலாக நிலைநாட்டினர். உயர்தனிச் செம்மொழியாவது மிகப் பெருமையுடையதாயும், பண்பட்டதாயும், பிறமொழிகளின் உதவியின்றித் தனித்தியங்க வல்லதாயும், அழகும் இனிமையும் பொருந்தியதாயும் உள்ள மொழியே. அவர் காலத்திற்கு முன் தமிழைப் பற்றிப் பலர் பிழைபட்ட கருத்துடையவர்களாக இருந்தார்கள். தமிழ் பண்படாத மொழி, அது வடமொழிக் கலப்பின்றி இயங்கவல்லதன்று என்று தவருக அவர்கள் கருதினர்கள். ஆனால் கால்டுவெல், பழந்தமிழ் நூல்களில் உள்ள சொல் வளத்தையும் கருத்து நயங்களையும் சுட்டிக் காட்டித் தமிழின் பெருமையையும் ஆற்றலையும் அனைவருக்கும் அறிவுறுத்தினர். சிலர் கருதியதுபோல அன்றி அது வடமொழியிலிருந்து வந்ததல்ல வென்றும், வடமொழியின் துணையின்றி அது வளர்ந்தோங்க வல்லதென்றும் அவர் நிலைநாட்டினர்.

கால்டுவெல் சீரிய புலமையும் சலியா உழைப்பும் உடையவர்; அன்பு, கருணை, ஆர்வம், பொறுமை முதலிய அருங்குணங்கள் நிறையப் பெற்றவர். அவர் மக்களால் பெரிதும் விரும்பிப் போற்றப்பட்டார்; பல பாராட்டுதல்

களையும் பெற்றார். அவர் சென்றவிடமெல்லாம் மக்கள் அவருக்கு வரவேற்பும் வாழ்த்தும் ஊர்வலங்களும் நிகழ்த்தினார்கள்.

கால்டுவெல்லின் புலமையையும் அருந்தொண்டுகளையும் அறிந்த அரசாங்கம், அவரைச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் முதல் செனட் சபையில் உறுப்பினராக நியமித்தது; அதன் இருபத்திரண்டாவது ஆண்டு பட்டமளிப்பு விழாப் பேருரை நிகழ்த்துமாறும் செய்தது. இப்பெருமைகள் அவரைத் தேடி வந்தவை.

தமது மூப்புப் பருவத்தில் அவர் ஓய்வு பெற இங்கிலாந்து சென்றிருந்தபோது அவரது நண்பர்களும் உற்றார் உறவினரும் அவரை மீண்டும் இந்தியாவுக்குச் செல்ல வேண்டாமென்று தடுத்து அங்கேயே தங்கிவிடுமாறு வேண்டினார்கள். ஆனால் அவர் அதற்கு இசையாமல், "இத்தனைக் காலம் தமிழர்களுக்காகவே வாழ்ந்த நான் இனியும் அவர்களுக்காகவே வாழ்வேன்; அவர்கள் நாட்டிலேயே இறப்பேன்," என்று உறுதியுடனும் உருக்கமாகவும் கூறினார். அங்ஙனமே மீண்டும் இங்கு வந்து சேர்ந்தார்.

அவர் தமது இறுதிக் காலத்தில் கோடைக்கானல் மலையில் தங்கியிருந்தார்; அங்கே ஓர் அழகான கோயிலையும் கட்டினார்; இன்னும் அது அவரது சமயப்பற்றுக்கும் கலையுணர்ச்சிக்கும் அழகிய சான்றாக விளங்கிக்கொண்டிருக்கிறது. அங்கிருக்கும்போதுதான் அவர் தமது எழுபத்து ஏழாம் வயதில் காலமானார். அவரது உடல் இடையன்குடிக்குக் கொண்டுவரப்பட்டபோது, அதைக்

கண்ட அக்கிராம மக்கள் கண்ணீர் சொரிந்து கலங்கினர்கள். அங்கு அவர் கட்டிய ஆலயத்தினருகிலேயே அவரது உடல் அடக்கம் செய்யப்பட்டது.

## கேள்விகள்

1. கால்டுவெல்லின் இளமைக் கல்வியைப் பற்றி ஒரு சிறு குறிப்பெழுதுக.
2. அவர் இடையன்குடியில் செய்த சீர்திருத்தம் என்ன?
3. அவர் திராவிட மொழிகளைப் பற்றிக் கூறியிருப்பது என்ன?
4. தமிழின் பெருமையை அவர் எவ்வாறு நிலைநாட்டினர்?
5. 'தமிழ் உயர்தனிச் செம்மொழி' என்பதன் கருத்தென்ன?
6. மொழியாராய்ச்சித் துறையில் அவர் செய்த தொண்டு யாது?
7. அவரைத் தேடிவந்த பெருமைகள் யாவை?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—
குறிப்பிடத் தகுந்த, ஈடுபடுதல், ஒருப்படுதல், வாயிலாக சீர்படுத்துதல், ஒப்பரிய, அரும்பெரு, ஒப்புயர்வற்ற, அறிவுறுத்துதல், வலியுறுத்துதல், கடமைப்பட்டிருத்தல், நினைவுச் சின்னம், உருக்கமாக, கலையுணர்ச்சி.

2. பிரித்தெழுதுக:—
கலையுணர்ச்சி, ஒப்பரிய, ஒப்பிலக்கணம், வலியுறுத்தல், அறிவுறுத்தல், பேருரை, சிற்றூர், பல்லாயிரம், கடற்பயணம் அளவற்ற எழுபது.

## அருஞ்சொற்பொருள்:

ஒருப்பட்டார்—இணங்கினர், சரகம்—பிரிவு, பகுதி, வலியுறுத்தல்—உறுதியாக நிலைநாட்டுதல், செம்மொழி—செம்மையான மொழி, தனித்தியங்க—தனியாக நிற்க, நினைவுச் சின்னம்—மறக்காமலிருப்பதற்குரிய அடையாளம், பேருரை—உயர்ந்த சொற்பொழிவு, செனட்—ஒரு கல்விக் குழு

———

# 10. மழை

மழை எப்படிப் பெய்கிறது என்று உங்களைக் கேட்டால், பூமியின் மீதுள்ள நீரானது சூரிய வெப்பத்தால் ஆவியாக மாறி மேலே சென்று குளிர்ந்து மழைத் துளிகளாக விழுகிறது என்று நீங்கள் எளிதில் சொல்லிவிடுவீர்கள். ஆனால் மழை இவ்வளவு எளிதில் பெய்துவிடுவதில்லை என்பதை நீங்கள் உணர வேண்டும். இது முற்றிலும் உண்மையானால் எப்பொழுதும் மழை பெய்துகொண்டிருக்க வேண்டுமல்லவா? அ ப் ப டி இல்லையே, ஏன்?

சில சமயங்களில் கருமேகங்கள் குமுமி, இடித்து மின்னி, மழை பெய்வதுபோல் அறிகுறிகள் காட்டிப் பிறகு பெய்யாமலேயே போய்விடுவதையும் நாம் அறிவோம்; மற்றும் சில சமயங்களில் எவ்வகை முன்னறிவிப்பும் இல்லாமலேயே திடீரென்று பெருமழை பெய்துவிடுவதையும் நாம் அறிவோம். இவற்றிற்குக் காரணம் என்ன?

நீர் எங்கெங்கு இருக்கிறதோ அங்கெல்லாம் அதன் மீது எப்போது சிறிது நீராவி இருந்துகொண்டே இருக்கும். அது சில சமயங்களில் கீழே உள்ள நீரின் மீதே விழுந்து நீராக மாறிவிடும். அதே சமயத்தில் கீழிருந்து மீண்டும் நீராவி மேலே செல்கிறது. மேலிருந்து கீழே வரும் நீராவியின் அளவும் கீழிலிருந்து மேலே செல்லும் நீராவியின் அளவும் சமமாயிருந்தால், அப்போது நீர்ப் பரப்பின் மீதுள்ள ஆவி தெவிட்டிய நிலையில் (satu-

rated)உள்ளது என்றும், கீழுள்ள நீரோடு சமநிலையில் (Equilibrium) உள்ளது என்றும் கூறுகிறோம். கீழே உள்ள நீரை உஷ்ணப்படுத்தினால் அதிக நீராவி உண்டாகித் தெவிட்டிய நீராவியின் அழுத்தம் அதிகமாகும். அப்போது மேலே உள்ள நீராவியும் கீழே உள்ள நீரும் முன்போலச் சமநிலையை அடைவதற்கு நீராவி தண்ணீராக மாறிக் கீழே விழும். நீரின் மீது அதிக உஷ்ணம் படுவதற்கேற்ப, அதிலிருந்து உண்டாகும் நீராவியும் மிகுதியாகி அதிக உயரம் செல்லும். அது முன்போலச் சம நிலையடைவதற்கு நீர்த்துளிகளாக மாறிக் கீழே விழும். இதுவே மழை உண்டாவதற்கு அடிப்படைக் காரணம்.

பூமியின் மீது காற்று வீசும்போது அதிக நீராவி மேலே எடுத்துச் செல்லப்படுகிறது; அக்காற்று மேலே செல்லும்போது இலேசாகி விரிவடைகிறது. ஆகையால் அது குளிர்ச்சியடைந்து, அதில் உள்ள நீராவி மிகத் தெவிட்டிய நிலைக்கு வந்துவிடுகிறது; அப்போது அதில் அதிகமாக உள்ள நீராவி,நீராக மாறிவிடுகிறது.இப்படி ஆவதற்குப் பூமியில் உள்ளதுபோல, ஆகாயத்திலேயே ஒரு நீர்ப்பரப்பு வேண்டும். அதைக் காற்றிலுள்ள நீர்த் துளிகள் தாமாகவே உண்டாக்கிக்கொள்கின்றன.

ஆனால் சாதாரணமாகக் காற்றில் உள்ள நீராவியானது தெவிட்டியநிலையில் இராது. அந்த நீராவி நீர்த் துளிகளாக மாறவேண்டுமானால், அதற்கு உதவியாகக் காற்றில் சில பற்றுக்கோடுகள் இருக்க வேண்டும். அப்பற்றுக்கோடுகள் நான்கு வகைப்படும். அவை

யாவன; கடல் நீர் ஆவியாக மாறும்போது மேலே தெறித்துச் செல்லும் உப்புத் துணுக்குகள், மின்னலினுல் உண்டாகும் அக்நித் திராவகத் துணுக்குகள், புகைத் துணுக்குகள், தூசி என்பன. இவற்றைச் சுற்றி நீர்த் துளிகள் அதிவிரைவில் உண்டாகி மேகத்தில் தங்கி யிருக்கும்.

இந்த நீர்த்துளிகள் எல்லாம் மழையாகப் பெய்து விடுவதில்லே. ஏனெனில் அவற்றுள் பெரும்பாலா னவை மிகச் சிறியவையாய் இருப்பதால், சிறிது தூரம் கீழே வந்ததும் மீண்டும் பூமியின் மீதுள்ள உலர்ந்த காற்றின் வெப்பத்தால் ஆவியாகி விடுகின்றன. மழை யாகப் பெய்யும் துளிகள் மிகப் பெரியவையாய் இருக்க இருக்கவேண்டும். அப்படி இருப்பதற்கு, மேகம் மிக உயரத்தில் சென்று அதிகமாகக் குளிர்ச்சியடையவேண் டும். அப்போது உண்டாகும் பெரிய நீர்த்துளிகள் வேகமாகக் கீழே இறங்குவது மட்டுமன்றி முற்றிலும் ஆவியாகமலும் தடுக்கப்படும். ஆகவே, அவை மழைத் துளிகளாகப் பூமியை வந்தடையும். ஒரு மேகத்தில் உள்ள நீர்த்துளிகள் எல்லாம் மேற்கூறியவாறு பெரிய மழைத் துளிகளாக மாறுவதற்குரிய நீராவி, நீர்த் துளிகள், வெப்பம் முதலிய நிலேமைகள் எப்போதும் தகுந்த அளவில் அமைவதில்லே; ஆகையால் தான் மேகம் இருந்தாலும், சில சமயங்களில் மழை பெய்வ தில்லே.

மிக உயரத்தில் உண்டாகும் மேகங்களில், சில சமயங்களில் நீர்த்துளிகள் பனிக்கட்டித் துணுக்குகளாக மாறித் தங்கியிருக்கும். ஏனென்ருல் அதிக உயரத்தில் பனிக்கட்டி உண்டாவதற்குரிய தாழ்ந்த உஷ்ணநிலே

இருக்கிறது. இப்பனிக்கட்டித் துணுக்குகள் மேகத்தின் மேற்பாகத்திலேயே இருக்கும். அங்கிருந்து அவை மேகத்தின் வழியாக இரங்கி வரும்போது, அதில் உள்ள நீராவியின் வெப்பத்தால் உருகி நீர்த்துளிகளாக மாறி மழை பெய்யும். பனிக்கட்டியானது முழுவதும் உருகா விட்டால், மழையுடன் ஆலங்கட்டியாக விழும்.

பெருமழை பெய்ய வேண்டுமானால், மேகங்கள் கீழிருந்து மேலாக அதிகக் கனம் உள்ளவையாய் இருக்க வேண்டும். அதாவது அவற்றின் உச்சிக்கும் அடிக்கும் இடையே நெடுந்தூரம் இருக்கவேண்டும்; அன்றியும் அவற்றின் உச்சி மிக உயரத்திலும் அடி மிகத் தாழ்ந்தும் இருக்கவேண்டும். அப்போது அவற்றின் மேல் பகுதியில் உள்ள நீர்த்துளிகள் கீழே இறங்கும்போது இடையில் உள்ள நீர்த்துளிகளை யெல்லாம் சேர்த்துக்கொண்டு பெருந்துளியாக மாறிக் கீழே விழும்.

அதிக உஷ்ணமாக உள்ள நிலப்பகுதிகளில் நீராவி அதிகமாகவும் விரைவாகவும் உண்டாவதால், மிகக் கனமான மேகங்கள் உண்டாகின்றன. அவை சுமார் 10000 அடி வரை கனமுள்ளவையாய் இருக்கும்; மிக உயரத்திலும் சென்றிருக்கும். ஆகையால் இம்மேகங்களின் மேற்பகுதியில் பனிக்கட்டித் துணுக்குகள் உண்டாகின்றன. அவை கீழே இறங்கும்போது உருகி, வழியில் உள்ள நீராவியையும சேர்த்துக்கொண்டு பெருந்துளிகளாக மாறி விழுகின்றன.ஆப்பிரிக்கா தென் அமெரிக்கா முதலிய பூமத்தியரேகைப் பகுதிகளில் மேகங்கள் அதிக உஷ்ணத்தால் ஐந்து மைல் உயரத்திற்குமேல் சென்று

பிறகு அங்கே குளிர்ந்து பெருத்த மழையைக் கொடுக் கின்றன. மற்றப் பகுதிகளில் சில ஆயிரம் அடி உயரத் திலேயே மேகங்கள் உண்டாவதால் அவ்வளவு பெரிய மழை பெய்வதில்லை.

இக்காலத்தில் செயற்கை முறையில் மழை உண் டாக்கச் சிலர் முயன்று வருகிறார்கள். இதில் ஓரளவு வெற்றியும் அடைந்திருக்கிறார்கள். மேகம் உண்டாகிப் பிறகு மழை பெய்யாமல் இருந்தால், அம்மேகங்களி லிருந்து மழை பெய்யுமாறு செய்யலாம். அவ்வளவே அன்றி நாமாக மேகங்களை உண்டாக்கி மழை பெய்விக்க முடியாது. மேகங்கள் மிக உயரத்தில் குளிர்ந்த பகுதி களில் இருக்கும்போது, அவற்றின் மேல் பனிக்கட்டித் துணுக்குகளையோ திட நிலையில் உள்ள கார்பன்-டை-ஆக்ஸைடு அல்லது கால்சியம் குளோரைடு என்ற பொருளையோ தூவினால், அவை நீர்த்துளிகளை உடனே உண்டாக்கி மழை பெய்விக்கும். அவை மேகத்தில் உள்ள நீராவியைத் திடீரென்று குளிரச் செய்து அதை நீர்த்துளிகளாக மாற்றிவிடும். எல்லா மேகங்களின்மீதும் இவற்றைத் தூவினால் மழை உண்டாகாது. மேகத்தில் போதிய அளவு நீராவி, நீர்த்துளி, வெப்பம் முதலியவை இருந்தால்தான் செயற்கை முறையில் மழை பெய்விக் கலாம். இல்லாவிட்டால் முடியாது. மேகங்களின் மீது பனிக்கட்டி முதலியவற்றைத் தூவுவதற்கு ஆகாய விமானங்களில் செல்லவேண்டும். ஆஸ்திரேலியா, ரஷியா முதலிய நாடுகளில் இப்படிச் செயற்கை மழையை உண்டாக்குவதில் வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

## கேள்விகள்

1. மழை உண்டாவதற்கு அடிப்படைக் காரணம் என்ன?
2. நீராவி நீர்த்துளிகளாக மாறுவதற்கு ஆகாயத்தில் உள்ள பற்றுக்கோடுகள் எவை?
3. மேகத்தில் உண்டாகும் நீர்த்துளிகள் எல்லாம் ஏன் மழையாகப் பெய்வதில்லை? அவை எப்பொழுது மழையாகப் பெய்யும்?
4. ஆலங்கட்டி மழை எப்பொழுது பெய்யும்?
5. பெருமழை எப்படிப் பெய்கிறது?
6. பூமத்தியரேகைப் பகுதியிலும் மற்றப் பகுதியிலும் உண்டாகும் மழைகளுக்குள்ள வேற்றுமை என்ன?
7. செயற்கை மழையை எப்படி உண்டாக்கலாம்? அதனை எத்தகைய மேகங்களில் உண்டாக்கலாம்?

## பயிற்சி

கீழ்க்கண்ட வாக்கியங்களைப் பூர்த்தி செய்க:—

1. மேலிருந்து கீழே வரும் நீராவியின் அளவும் கீழிருந்து மேலே செல்லும் நீராவியின் அளவும் சமமாயிருந்தால் —
2. கீழே உள்ள நீரை உஷ்ணப்படுத்தினல் அதிக நீராவி உண்டாகித் —
3. நீரின்மீது அதிகமாக உஷ்ணம் படுவதற்கேற்ப —
4. நீராவியைச் சுமந்து செல்லும் காற்று மேலே செல்லும்போது —, ஆகையால் அது — —
5. சாதாரணமாகக் காற்றில் உள்ள நீராவியானது —
6. மேகத்தில் உள்ள நீர்த்துளிகள் எல்லாம் மழையாகப் பெய்வதில்லை. ஏனென்றல் — —

———

7. ஆலங்கட்டி மழை பெய்வதற்கு —.

8. பெருமழை பெய்வதற்கு மேகங்கள் —.

9. செயற்கை மழை பெய்விப்பதற்கு —

10 மேகத்தில் போதிய அளவு — செயற்கை மழை பெய்விக்கமுடியாது.

## அருஞ்சொற்பொருள்

குழுமி—கூடி; தெவிட்டிய நிலையில் உள்ள நீராவி—ஓரிடத்தில் காற்றில் எவ்வளவு நீராவி கொள்ளுமோ அவ்வளவு நீராவி அடங்கியிருத்தல்; துணுக்கு—சிறு துண்டு; ஆலங்கட்டி—மழையுடன் வரும் பனிக்கட்டி.

---

# 11. சங்ககால மதுரை

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, மாடங்கள் மலிந்த கூடல் என்னும் மதுரையம்பதியின் கண், மாங்குடி மருதனுர் என்ற புலவர் ஒரு நாள் தாம் அங்குக் கண்ட காட்சிகளை, அவரால் எழுதப்பெற்ற மதுரைக் காஞ்சி என்னும் பாட்டில் மிக அழகாக வருணித்திருக்கிருர். மதுரையின் அழகும் பெருமையும் அக் காலத்தில் எப்படி இருந்தன என்று நாம் அதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

கதிரவன் சாய்ந்துள்ள ஓர் அந்திப்பொழுதில், அப் புலவர் மதுரைத் தெருக்களின் வழியே சென்ருர். அன்று மதுரை நகர்த் தெருக்களும் வீடுகளும் திருமாலுக்காகக் கொண்டாடப்படும் திருவோணத் திருவிழாவின் பொருட்டு மிக நன்ருக அலங்கரிக்கப் பெற்றிருந்தன; கோயில்களில் விழாக்கள் கொண்டாடப்படுவதைக் காண்பதற்குச் செல்வர்கள் தங்கள் தேர்களில் ஏறிச் சென்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் அணிந்திருந்த பட்டாடைகளில் மிக நுட்பமான பூவேலைப்பாடுகள் பொருந்தியிருந்தன. சில வீரர்களும் விலையுயர்ந்த ஆடைகளையும் அணிகளையும் அணிந்துகொண்டு அத்தேர்களின் பின்னுல் சென்ருர்கள். அவர்கள் அரையில் உடைவாள்களைச் செருகிக்கொண்டு, கால்களில் வீரக் கழல்கள் ஒலிக்கச் சென்ருர்கள். கோயில்களில் பலவகை இன்னிசைக் கருவிகள் முழங்கப் பூசைகளும்

விழாக்களும் சிறப்பாக நடந்தேறின. அவற்றை யெல்லாம் புலவர் கண்டு அப்பால் சென்ருர்.

மற்ருேரிடத்தில் சில பெண்கள் அழகிய அணி கலன்களைப் பூண்டு, சிவந்த அழகிய முகத்தையுடைய தமது குழந்தைகளைக் கையில் ஏந்திச் சென்ருர்கள். அக்காட்சி, தாமரைப் பூக்களைக் கையில் ஏந்திச் செல்வதுபோல இருந்தது. ஒரு கையில் குழந்தைகளையும் மற்ருெரு கையில் பூசைக்குரிய பொருள்களையும் ஏந்திக் கொண்டு, தம் கணவன்மார்களுடன் அவர்கள் பௌத்த பள்ளிகளில் புத்தப் பெருமானை வணங்குவதற்காகச் சென்று கொண்டிருந்தார். இக்காட்சியையும் புலவர் கண்டு களித்தார்.

அந்தணர் தெருக்களில் அந்தணர்கள் தத்தம் வீடுகளில் மறைகளை இனிமையாக ஓதிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பல வேள்விகளைச் செய்து சிறந்த ஒழுக்கமுடையவர்களாயும், அன்பும் அறமும் நிறைந்த நெஞ்சினராயும் இருந்தார்கள். அவர்களுடைய வீடுகள் மலைகளைப் போன்ற பெருமையும் உயர்வும் உடையவையாய் இருந்தன. அவற்றையும் கடந்து அப்பால் சென்ருர் புலவர்.

ஒருபால், அருக சமயத்தினர் வாழும் பள்ளிகள் இருந்தன. புலவர் அவ்வழியே சென்ருர். அருகர் என்போர், முக்காலமும் உணர்ந்த சைன சமயப் பெரியோராவர். அவர்கள் கல்வியின் கரையைக் கண்டு, ஆன்றவிந்து அடங்கிய கொள்கையராய் வாழ்ந்து வந்தார்கள்; சிறிய வாயினையுடைய குண்டிகை என்னும்

சிறு செம்புகளை உறியிலே வைத்துத் தொங்கவிட்டிருந் தார்கள்; தண்ணிய குளங்களைப்போலக் குளிர்ந்த பள்ளி களில் தங்கியிருந்தார்கள். அவர்களது பள்ளிச் சுவர்கள் செம்பால் செய்ததுபோல, பல சித்திரங் களோடு பொலிந்தன; அப்பள்ளிகள் மிக உயரமாய், மலைகள் போலவும், பார்ப்போர் கண்களைக் கவருமாறு மிக அழகுடனும் விளங்கின. பள்ளிகளைச் சுற்றி இருந்த பூஞ்சோலைகளில் சமண (சைன)ப் பெரியோர்கள் தங்கிப் பூசை செய்வார்கள்.

மற்றெருருபால் வணிகர் தெருக்கள் இருந்தன. புல வர் அவற்றின் வழியே சென்ருர். வணிகர் வீடுகள், குன்றுகள் திரண்டிருப்பதை ஒத்திருந்தன. அவர்கள் பல நாடுகளிலிருந்தும் வந்த பொருள்களையும், மலைபடு பொருள், கடல்படுபொருள், நிலம்படு பொருள் ஆகிய வற்றையும் திரட்டிக் கொணர்ந்து விற்றுக்கொண்டிருந் தார்கள். நவரத்தினங்கள், தங்கம், வெள்ளி முதலிய பல விலையுயர்ந்த பொருள்களையும் அவர்கள் விலைகூறிக் கொண்டிருந்தார்கள். பெரிய தெருக்களிலும், சிறிய சந்துகளிலும் சில்லறை வணிகர் சிலர் அலைந்து திரிந்து கொண்டு, தம் பொருளை உரக்கக் கூவி விற்றனர். சங்கறுத்து வளைகள் செய்வோரும், பொற்கொல்லரும், பொன்னை உரைகண்டு மாற்றுப் பகர்வோரும், பாத்தி ரங்களை வாங்கி விற்போரும் புடவைகளை விற்போரும், பூ, அகில், சந்தனம், சுண்ணம் முதலியவற்றை விலை கூறுவோரும், சித்திர வேலைக்காரரும், நவதானிய வாணி பம் செய்வோரும், எனப் பல வகைத் தொழிலாளர் அத் தெருக்களில் திரிந்த வண்ணம் தத்தம் தொழில்களைச் செய்து வந்தனர்; சாலையோரங்களில் பழ வகைகள்,

உணவுப் பண்டங்கள், பாற்சோறு, இறைச்சிச் சோறு, கறி வகைகள் முதலிய பண்டங்களைச் சிலர் விற்றனர். இவர்களின் ஓசையெல்லாம் சேர்ந்து கடலொலி போல எங்கும் ஒலித்துக்கொண்டிருந்தது.

பிறகு புலவர் மனையற மங்கையர் வாழும் இல்லங்களின் பக்கமாகச் சென்றார். அவ்வில்லங்களில் பெண்டிர், செங்கழுநீர் மலர்களை மாலையாகத் தொடுத்துச் சூடிக்கொண்டு, தம் ஆபரணங்களைத் திருத்தி அணிந்துகொண்டனர்; கஸ்தூரி, சந்தனம் முதலிய நறுமணப் பொருள்களை அரைத்துப் பூசிக்கொண்டு தம்மை ஒப்பனை செய்துகொண்டும், தமது மெல்லிய ஆடைகளுக்கு அகிற்புகை ஊட்டிக்கொண்டும், தம்மை அழகு படுத்திக்கொண்டனர். பிறகு அவர்கள் விளக்குகளை ஏற்றி வீட்டின் வெளிப்புறத்திலும் உட்புறத்திலும் வைத்து யாழிசைத்து இன்னொலி பரப்பி, நெல்லும் மலரும் தூவி, இல்லுறை தெய்வத்தை வழிபட்டனர். மக்கள் இல்லாத மகளிர், தம் மக்களைப் பெற விரும்பிச் சுற்றத்தார் புடைசூழத் தெய்வத்தை வணங்குதற் பொருட்டுக் கோயிலுக்குச் சென்றனர்; அங்கே யாழ், முழவு, பறை முதலியவை முழங்கத் தெய்வத்திற்குக் கையுறை வழங்கி வழிபட்டுத் திரும்பினர்.

புலவர் மற்றொருபுறமாகச் சென்றார். அங்கே முருகனுக்குப் பூசைகள் நடந்துகொண்டிருந்தன. தமக்குள்ள தீங்குகள் அகலுவதற்காகச் சிலர் முருகனை வழிபட்டு வெறியாடல் நிகழ்த்தினார்கள். பல வித இசைக்கருவி

கள் ஒலிக்க, பூசாரி வேலைக் கையில் ஏந்தித் தலையில் குறிஞ்சிப் பூவையணிந்து, தன்மேல் தெய்வம் வரப் பெற்று ஆடத் தொடங்கினன். பெண்கள் கைகோத்துக் குரவை என்னும் கூத்து ஆடினர்கள். வேறு பலவகைக் கூத்துக்களும் ஆடல் பாடல்களும் அங்கு நிகழ்ந்தன.

புலவர் இக்காட்சிகளைக் கண்டவண்ணம் நள்ளிரவு வரை கழித்துவிட்டார். இது வரையில் இருந்த ஓசை கள் யாவும் இப்பொழுது அடங்கிவிட்டன. பெண்கள் உறங்கிவிட்டனர்; கடைகள் அடைக்கப்பட்டுவிட்டன. சாலையோரத்தில் பண்டங்களை விற்பவர்கள் அப்படியே கண்ணயர்ந்துவிட்டார்கள். அப்போது சில கள்வர்கள் தெரு வழியே சென்றனர். அவர்கள் தடித்துக் கருமை யாய் இருந்தனர்; கருஞ்சட்டையை அணிந்து, கையில் உளியும் கன்னக்கோலும், தோள்களில் வாள்களும் தாங் கிக் காலிற் செருப்பணிந்து சென்றனர்; அரையில் நீலக் கச்சையணிந்து, அதில் சொட்டை என்னும் ஒரு வகை வாளைச் செருகி, நூலேணியை வரிந்து கட்டிக்கொண்டு பதுங்கிப் பதுங்கிப் பிறர் கண்ணில் படாமல் சென்று கொண்டிருந்தனர். அப்போது கள்வரைப் பிடிக்கும் அஞ்சா நெஞ்சுடைய காவலர் சிலர் அவர்களை அடி யொற்றிப் பின் தொடர்ந்தார்கள். யானைமீது பாயச் சமயம் பார்த்திருக்கும் புலியைப் போல அவர்கள் பதுங் கிச் சென்றார்கள். அவர்கள் உறங்குவதையே அறியாத வர்கள்போலக் காணப்பட்டார்கள். எத்தகைய கொடிய மழையிலும் அவர்கள் தங்கள் கடமையை மறவாமல் தம்மிடமிருந்து தப்ப எண்ணும் கள்வரைக் கைப்பிடி

யாகப் பிடிக்க நள்ளிரவில் நகரெங்கும் சுற்றிக் கொண்டே இருந்தார்கள்.

கங்குலில் இக்காட்சிகளைக் கண்டவண்ணம் சென்ற புலவர், களைத்துப்போய் ஓரிடத்தில் சற்றே கண்ணயர் வதற்குமுன் வைகறை வந்துவிட்டது. அப்போது பொய்கையில் நீராடச் சென்ற புலவர் அதனருகில் மலர் மொட்டுக்கள் கட்டவிழந்து மணம் வீசுவதைக் கண் டார். வண்டுகள் அப்பூக்களில் தேனுண்ண ரீங்காரம் செய்துகொண்டு வந்தன. அவ்வண்டுகளின் ஒலி போல அந்தணர் தம் வீடுகளில் வேதங்களை ஓதினர்! யாழிசை வல்லார் யாழை ஒலித்தனர்! சில பெண்கள் தெருக்களை மெழுகிக் கோலமிட்டனர். மற்றும் சில பெண்கள் வீட்டு வேலைகளைச் செய்யத் தொடங்கினர்; அவர்களுடைய காற்சிலம்புகள் அப்போது ஒலித்தவண் ணம் இருந்தன.

அரண்மனையில் அரசனையும் அரசியையும் துயில் எழுப்புதற்குப் பாடல்கள் பாடினர் சிலர். முரசுகள் ஒலித்தன; பறவைகள், யானைகள், காளைகள், சேவல்கள் முதலியவை பேரொலி செய்தன. அரண்மனை வாயிலில் அரசனது படை வீரர்கள் தாங்கள் பகைவரிடமிருந்து கவர்ந்து வந்த பலவகைப் பொருள்களை அவனுக்குக் காணிக்கையாக அளிக்கச் சமயம் பார்த்துக் காத்துக் கொண்டிருந்தனர். கதிரவன் கீழ்த்திசையில் தன் கரங் களைப் பரப்பிப் பேரொலியுடன் தோன்றினான்.

இக்காட்சிகளையெல்லாம் கண்ட நம் புலவர் வியப் பில் ஆழ்ந்து, அரசனைக்கண்டு வாழ்த்தி அமைந்தார்.

இப்புலவர், அக்காலத்தில் அரசாண்ட தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னனால் நன்கு மதிக்கப்பெற்று, பெரும்புலமை வாய்ந்த அவனது அவைக்களப் புலவராயிருந்தவர்.

## கேள்விகள்

1. மாங்குடி மருதனார் என்பவர் யார்? அவர் எந்த நாளில் தாம் கண்ட காட்சிகளை வருணிக்கிறார்?

1. விழாவிற்கு வந்த அரசரும் வீரரும் அணிந்திருந்த ஆடைகள் எப்படியிருந்தன?

3. பெண்கள் குழந்தைகளைக் கையில் ஏந்திச் செல்லும் காட்சி எப்படியிருந்தது?

4. அருகப் பெரியோர் வீடுகள் எங்ஙனமிருந்தன?

5. மதுரையில் வணிகர் விற்ற பொருள்கள் யாவை?

6. மதுரையில் வாழ்ந்த பலவகைத் தொழிலாளிகள் யாவர்?

7. மனையற மங்கையர், தம் இல்லங்களில் என்ன செய்து கொண்டிருந்தனர்?

8. வெறியாடுதல் என்பது என்ன?

9. கள்வரையும் அவரைத் தொடர்ந்து சென்ற காவலரையும் புலவர் எங்ஙனம் வருணிக்கிறார்?

10. வைகறையில் புலவர் கண்ட காட்சிகள் எவை?

## பயிற்சி

1. ஒரு பெரிய நகரத்தில் நீவிர் கண்ட காட்சிகளை இப்பாடத்தில் உள்ளது போல 25 வரிகளில் சுருக்கி எழுதுக.

2. சிலப்பதிகாரம் என்னும் நூலில் மதுரையைப் பற்றி வந்துள்ள வருணனை எத்தகையதென்று கேட்டுத் தெரிந்துகொள்க.

## அருஞ்சொற்பொருள் :

மாடம்—ஒரு கட்டட வகை: மலிந்த — நிறைந்த. திருவோணம்—ஒரு நட்சத்திரம்: நுகர்தல் — அனுபவித்தல்: ஆன்றவிந்து — (கல்வி கேள்வி ஒழுக்கங்களால்) நிறைந்து, செருக்கின்றி ; நவரத்தினம் — முத்து, பவளம், மாணிக்கம், மரகதம், நீலம், கோமேதகம், புஷ்பராகம், வச்சிரம், வைடூரியம் என்னும் ஒன்பது பொருள்கள்: சுண்ணம்—வாசனைப் பொடிகள்: நவதானியம் — நெல், எள், துவரை, கடலை, பயறு, உளுந்து, அவரை, மொச்சை, தினை என்னும் ஒன்பது தானியங்கள் ; மனையறமங்கையர் — இல்லறம் நடத்தும் பெண்கள் ; ஒப்பனை—அழகு; முகை—மொட்டு; கையுறை—காணிக்கை; நிவேதனம் முதலியவை; கண்ணயர்தல்—உறங்குதல்; கங்குதல்—இரவு; வைகறை—விடியற்காலம்; துயில்—தூக்கம்; பள்ளி—சைன பௌத்தத் துறவிகள் தங்குமிடம்.

# 12. உலோகங்கள்

## (நாடகம்)

[உலோகங்களின் பயனை விளக்கும் கற்பனை நாடகம் ஒன்று கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. மாணவர்கள் இவ்வுலோகங்களின் பெயர்களைப் பெரிய அட்டைகளில் எழுதி மார்பிலும் முதுகிலும் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டு இந்த நாடகத்தை நடித்துக் காட்டலாம்.]

### காட்சி 1

[ஒரு மண்டபத்தில் சபை கூடுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. நடுவில் ஒரு பெரிய ஆசனமும், பக்கத்தில் இரண்டு புறமும் சில ஆசனங்களும் போடப்பட்டுள்ளன. நடுவில் உள்ள ஆசனத்தில் தங்கம் வீற்றிருக்கிறது. அதன் பக்கத்தில் ஒருபுறம் வெள்ளி, மற்றொரு புறம் செம்பு; மற்ற ஆசனங்களில் காரீயம், வெள்ளீயம், இரும்பு, பித்தளை, வெண்கலம், மணிவெண்கலம் முதலியவை உட்கார்ந்துகொண்டிருக்கின்றன.]

தங்கம்: எனதருமை அமைச்சர், வெள்ளியாரே! வருக; மற்ற யாவரும் வருக; நம் வாழ்க்கையில் ஏற்பட்டு வரும் பெரிய மாறுதல்களைப் பற்றி யோசிக்கவே இன்று இங்குச் சபை கூட்டினேம். நீங்களும் இதைப் பற்றி அறிந்திருப்பீர்கள்.

வெள்ளி: ஆம், அரசே! ஆனல், இப்பொழுது எதுவும் நெருக்கடி ஏற்பட்டதாகத் தெரியவில்லையே. அப்படி ஏதேனும் உண்டா? இருந்தால் அறிவியுங்கள்; ஆவன செய்வோம்.

தங்கம் : ஆம், உண்டு. தங்கம், வெள்ளி ஆகிய நாம் இருவரும் இதுவரையில் தனித் தன்மையோடு, புகழும் ஆதிக்கமும் பெற்றிருந்தோம். மற்ற நம் இனத்தவரும் (உலோகங்களும்) அப்படியே. ஆனால் இப்பொழுது சில வருடங்களாக, நம் பெருமை குறைந்து வருகிறது. நம் தனித் தன்மையான வாழ்க்கைக்குப் பங்கம் வந்துவிட்டது. ஏனெனில் அழகுக்காக அணிகலங்களாகவும் பாத்திரங்களாகவும் செய்வதற்குக் கூட இப்பொழுது மக்கள் அதிகமாக நம்மை உபயோகிப்பதில்லை. தங்கத்திற்குப் பதில் தங்கமுலாம் அல்லது கில்டு பூசுகிறார்கள். சுத்தத் தங்கம் உதவாதென்று, தங்கத்துடன் செம்பைச் சேர்க்கிறார்கள். இப்படி நம்மைப் போலியாகவும் ஏமாற்றுபவர்களாகவும் மக்கள் மாற்றிவிட்டார்கள்.

வெள்ளி : ஆம், அரசே! அதைவிடப் பெரிய அவமானம் ஒன்று எனக்கு ஏற்பட்டிருக்கிறது. அது என்னவென்றால், வெள்ளிப்பாத்திரங்களுக்குப் பதில், வெள்ளி போன்ற தோற்றமுள்ள மட்டமான கலப்புகளைக் கொண்டு பாத்திரங்கள் செய்துகொள்ளுகிறார்கள். எவர்சில்வர் என்று ஏதோ ஒரு கலப்பு உலோகம் இப்போது வந்திருக்கிறது. அதில் சில்வர் (வெள்ளி) என்பதே கிடையாது. அதற்கு எவர்சில்வர் என்று பெயராம்! என்ன கேலிக்கூத்து! எஃகு, குரோமியம் என்னும் இரண்டு உலோகங்கள் கலந்து செய்யப்படும் பொருள் தான் அது. இந்த அநியாயத்திற்கு ஒரு முடிவுகட்டவேண்டும். இந்தப் போலிச் சரக்கு வந்தபின் என் பெருமையெல்லாம் போய்விட்டது. என்னைத் தேடுவார் இல்லை.

செம்பு : அரசே! அமைச்சரே! உங்கள் குறைகளை நான் கேட்டு வியப்படைகிறேன். எத்தனை புது உலோகங்கள் வந்தால் என்ன? கலப்பு உலோகங்கள் வந்தால் என்ன? நம் சுய மதிப்பு எங்கே போய்விட்டது? நாம் ஏன் அதற்காகப் புலம்ப வேண்டும்?

தங்கம் : நீ பேசலாம்; தாழ்ந்த நிலையில் உள்ள உனக்கு ஒன்றும் நஷ்டமாகிவிடவில்லை அதனால். ஆனால், எங்களைப் போன்ற உயர்ந்த நிலையில் உள்ளவர்களுக்கு இது அவமானமல்லவா? இதை நாங்கள் எப்படிப் பொறுத்துக்கொண்டிருப்பது?

செம்பு : நீங்கள் உயர்ந்த நிலையில் இருந்தால் இருங்கள். ஆனால் உறுதியுடன் நிற்க முடியுமா? உங்களோடு நான் சேர்ந்தால்தானே உங்களுக்கு உறுதி உண்டாக முடியும்? உங்களை மட்டும் கொண்டு நகைகள் நாணயங்கள் முதலியவை செய்ய முடியுமா? அப்படிச் செய்தால் உங்களால் தளராமல், குழையாமல் உறுதியாக இருக்கமுடியுமா? வெள்ளி மட்டும் என்ன? அதனுடனும் நான் சிறிது சேர்ந்தால்தானே அதற்கு உறுதி ஏற்படுகிறது? நாணயங்களில் நான் சேராமல், வெள்ளி நாணயம் ஆவது எப்படி? ஆனால் நானோ, உங்களைப் போல அன்றித் தனியே நிற்கமுடியும். தனித் தாமிரத்தினால் பாத்திரங்கள் செய்யப்படுவதும் நாணயங்கள் செய்யப்படுவதும் உங்களுக்குத் தெரியும் அல்லவா?

தங்கம் : சரி, நீங்களும் துத்த நாகம், வெள்ளீயம் முதலியவற்றுடன் சேர்ந்து உருமாறி விடுவதில்லையா? அது உங்களுக்கு இழுக்காக இல்லையா?

செம்பு : ஆம், நான் பிற உ லோ க ங் க ளு ட ன் சேர்ந்து இங்கே நிற்கும் பித்தளை, வெண்கலம் முதலிய நன்மக்களைப் பெற்றெடுத்தேன். ஆனால், இழுக்கென்ன? நன்கலமாகிய நன்மக்களைப் பெறுவதினும் பெருமை யாதுளது? இதோ இங்கிருக்கும் நமது நண்பர் இரும்பைக் கேட்டுப்பாருங்கள்.

இரும்பு : அரசே! தாங்கள் கூறுவது எனக்கும் வியப்பாகத்தான் இருக்கிறது. நான் தனியாகவும் மக்களுக்குப் பயன்படுகிறேன். பிற பொருள்களோடு சேர்ந்தும் பயன்படுகிறேன். இந்த இரண்டு வழிகளிலும் நான் பயன்படுவது பற்றி மிக்க மகிழ்ச்சியும் பெருமையும் கொள்கிறேன். அன்றியும், நான் ஏழைகளின் நண்பன் என்னைத்தான் பெரும்பாலோராகிய ஏழைகள் பல காரியங்களுக்கும் பயன்படுத்துகிறார்கள். நான் குரோமியம், நிக்கல் முதலியவற்றுடன் சேர்ந்து பளபளப்பாகவும் கவர்ச்சியாகவும் இருப்பதால், மக்கள் என்னை விரும்புகிறார்கள். இதில் என்ன தவறு? அன்றியும், மலிவாகவும் ஏராளமாகவும் பண்டைக்கால முதலே கிடைத்து வருவதால், என்னை யாவரும் நன்கு அறிந்து பயன்படுத்தி வருகிறார்கள். உங்களைப்போல் பலருக்கும் பயன்படாமல், அழகாக மின்னிக்கொண்டிருப்பதால் மட்டும் யாது பயன்? நான்தான் உண்மையில் நம் இனத்திற்கு இந்த ஜனநாயக யுகத்தில் நியாயமாக அரசனாக வேண்டும். உலோகங்களின் அரசன் என்று என்னைத் தான் மக்கள் கூறுகிறார்கள். ஏதோ நல்வினைப் பயனாய் நீங்கள் உயர்ந்த நிலையில் இருக்கிறீர்கள். அதிகமாக வெளிவராத காரணத்தால், மூடி முக்காடிட்டுப் பெருமை

தேடிக்கொள்ளப் பார்க்கிறீர்கள். ஒரு சிலருடைய ஆதரவைக் கொண்டு நீங்கள் கோட்டை கட்ட எண்ணு கிறீர்கள்.

தங்கம் : அமைச்சரே! கேட்டீரா, இந்தப் புரட் சிக்காரன் வார்த்தையை? நம்மை இகழ்ந்து பேச இவ னுக்கு இவ்வளவு துணிச்சலா? இவனுக்குக் கூடிய சீக்கிரம் ஒரு முடிவு கட்டவேண்டும்.

வெள்ளி : ஆம் அரசே! நாளையே மீண்டும் நாம் கூடி ஒரு வழிசெய்ய வேண்டும். எனக்குச் சிறிது அவ காசம் கொடுங்கள். நாளை சந்திக்கலாம். அதுவரையில் இவனைச் சிறையில் வைத்திருப்போம். (சபை கலைகிறது)

(திரை விழுகிறது)

## காட்சி 2

(இடம் : முன் கூறிய மண்டபம். பாத்திரங்கள்—இரும்பைத் தவிர மற்றவைகள்)

தங்கம் : அமைச்சர் வெள்ளியாரே! இரும்பின் இறுமாப்பு அடங்கிற்று! சிறையில் அவன் கண்ணீர் வடித்துக் கலங்குவதாகக் கேள்வியுற்றேன். அவனை இனி என்ன செய்யலாம்? ஏதேனும் ஒருவகையாக அவனைத் தொலைத்துவிடவேண்டும்.

வெள்ளி : அரசரே! நான் இதைப்பற்றி நெடிது எண்ணிப் பார்த்தேன்; அவனிடம் ஒற்றர்களை அனுப்பி வேவு பார்த்தேன்; அவன் இரும்பு நெஞ்சம் படைத்தவ

ளுக இருக்கிருன். அவன் ஒன்றுக்கும் பணியமாட்டான் போலிருக்கிறது. சிறைக்குள்ளேயே அவன் தன் கட்சிக்கு ஆள் சேர்த்து புரட்சி செய்யப் பார்க்கிருன். அவனைப் போல இரும்புக் கம்பிகளை எண்ணிக்கொண்டு சிறையில் இருக்கும் பலரும், சிறைக் காவலை மீறி நம்மீது பாயச் சித்தமாக இருக்கிருர்கள். நாம் நம்மை எதிர்த்து வரும் புரட்சி வேகத்தைத் தடுப்பது கடினமே.

தங்கம் : ஆனுல் நாம் இனி எப்படிக் கௌரவமாக இருப்பது? அவனுடன் சமரசமாகப் போக வழியுண்டா?

வெள்ளி : ஆம் அரசே, வழி இருக்கிறது. அவரவர்கள் தங்கள் தங்களுக்குரிய தொழில்களைச் செய்து வந்தால், ஒருவரோடு ஒருவர் முரண்பட வேண்டியதில்லையே. ஒரு வழியாகப் பார்க்கப்போனுல் நமது நன்மைக்கும் பாதுகாவலுக்கும் அந்த இரும்பை அண்டியே ஆகவேண்டியிருக்கிறது. இரும்புப் பெட்டிகளுக்குள்ளும் இரும்புக் கம்பிக் கதவுகளுக்குள்ளும் தானே நாம் சேமமாக இருக்க முடிகிறது? அன்றியும், இரும்பு எவ்வளவு பெரிய அளவில் பலவகைத் தொழில்களுக்கும் பயன்படுகிறது? இரும்புக் கருவிகளால் அன்ருே நம்மையும் தட்டி உருவாக்குகிருர்கள்? ஆகவே, அந்த இரும்பு நெஞ்சு படைத்த மனிதனை நாம் பகைத்துக்கொள்வது நல்லதல்ல.

செம்பு : ஆம், அரசே! நானும் அப்படியே எண்ணுகிறேன். நீங்கள் தங்கமான குணம் படைத்தவர் அல்லவா ? அப்படியிருந்தும் ஏன் பிறருடன் நீங்கள் சமரசமாகப் போகக்கூடாது ?

வெள்ளியம்: எங்கள் தங்க ராஜாவே! தாங்கள் ஒத்துப் போவதே நல்லது என்று எனக்கும் தோன்றுகிறது. தயவு செய்து இரும்பைச் சிறையிலிருந்து விடுவித்துச் சமாதானம் செய்து கொள்ளுங்கள். இல்லாவிட்டால் நமக்கு ஆபத்துத்தான்.

தங்கம்: சரி, அமைச்சரே! அப்படியே செய்து விடுவோம். அவரவர் தத்தம் கடமைகளைச் செய்வதில் நமக்கென்ன தடை? நாம்தான் பிறருடன் கலந்து வாழ்வதில் என்ன குறைவு? அவ்வாறே இனி வாழ்க்கை நடத்துவோம். சபை கலையட்டும்.

*(திரை விழுகிறது)*

## *கேள்விகள்*

1. தங்கத்திற்கு நேர்ந்த குறை என்ன?
2. எவர்சில்வர் என்பது என்ன?
3. செம்பு உயர்ந்த உலோகங்களுடன் ஏன் சேர்க்கப்படுகிறது?
4. பித்தளை, வெண்கலம் என்பவை என்ன உலோகங்களால் ஆனவை?
5. இரும்பு மற்ற உலோகங்களுடன் சேர்ந்து எப்படிப் பயன்படுகிறது?
6. இரும்பை எப்படி உலோகங்களுடன் அரசன் என்று கூறலாம்?
7. ஒவ்வோர் உலோகமும் எவ்வெவ்வழிகளில் பயன்படு

## பயிற்சி

கீழ்க்கண்டவற்றைச் சரியாகப் பொருத்துக :—

| | |
|---|---|
| இரும்பினால் | நகைகள் செய்ய உதவுகிறது. |
| தங்கம் | பாத்திரங்கள் செய்யலாம். |
| எவர்சில்வர் என்பது | பித்தளை ஆகிறது. |
| செம்பும் துத்தநாகமும் சேர்ந்து | எஃகும் குரோமியமும் சேர்ந்தது. |
| வெள்ளியால் | கருவிகள் செய்கிறோம். |

## அருஞ்சொற்பொருள்:

ஆவன—செய்ய வேண்டியவற்றை; ஆதிக்கம் — மேலதிகாரம்: பங்கம்—குறைவு; புலம்புதல்—அழுதல்; இழுக்கு—குறைவு; நன்கலம்—நல்ல ஆபரணம்; நல்வினை—அதிருஷ்டம்; அவகாசம்—நேரம்; இறுமாப்பு—கர்வம், செருக்கு; நெடிது—நீண்ட நேரம்; முரண்—மாறுபாடு, பகைமை; சேமம்—பத்திரம், நலம்.

---

# 13. மனோன்மணீயம்

பண்டைக் காலத்தில் சீவகன் என்னும் ஒரு பாண்டிய மன்னன் மதுரை மாநகரத்தைத் தலைநகராகக் கொண்டு பாண்டி நாட்டை அரசாண்டு வந்தான். அவனுக்கு மனோன்மணி என்னும் பெயருடைய அழகும் அறிவும் நிறைந்த ஒரு பெண் இருந்தாள். அவள் புருடோத்தமன் என்ற சேர அரசனைக் கனவில் கண்டு அவனையே மணம் புரிந்துகொள்ள விரும்பினாள்.

குடிலன் என்ற வஞ்சக நெஞ்சம் படைத்த ஒருவன் சீவகனுக்கு அமைச்சனாக அமைந்திருந்தான். அரசனோ, வெள்ளை மனம் படைத்த கள்ளமிலா நெஞ்சையுடையவன்; வெளுத்ததெல்லாம் பால் என்று எண்ணுபவன். குடிலன் சொல்லுவதையெல்லாம் உண்மையென்று நம்புபவன். குடிலன் அரசனைக் கொன்று அவனது நாட்டைக் கவர்ந்து ஆளத் திட்டமிட்டிருந்தான். அவனுக்குப் பலதேவன் என்ற மகன் ஒருவன் உண்டு. அவனுக்கு அரசன் மகள் மனோன்மணியையே எவ்வகையிலும் மணம் செய்துவைக்க அவன் எண்ணியிருந்தான்.

தன் சூழ்ச்சிகள் நிறைவேறுவதற்கு முதற்படியாக அவன் அரசனுடன் நயமாகப் பேசிப் பாண்டி நாட்டின் தலைநகரை மதுரையிலிருந்து திருநெல்வேலிக்கு மாற்றுமாறு செய்தான். பிறகு எல்லோரும் திருநெல்வேலிக்குச் சென்று தங்கியிருந்தார்கள். அங்குக் குடிலன் ஒரு போலிக் கோட்டையைக் கட்டி அதில் அரசனை அமர்த்தினான். பிறகு அவன் இரகசியமாக

மதுரைக் கோட்டையைப் பலப்படுத்தி அதைத் தன் பொறுப்பில் வைத்திருந்தான்.

குடிலனது கெட்ட எண்ணங்களைச் சீவகனுடைய அரச குருவாகிய சுந்தர முனிவர் என்பவர் அறிந்தார். ஆகையால், அவர் அரசனை அவனிடமிருந்து காப்பாற்றத் திருநெல்வேலிக் கோட்டையில் கரந்துரை வழியொன்று அமைத்து, அதன் வழியாக அடிக்கடி அரண்மனைக்கு வந்து நிகழ்வதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தார்.

இங்ஙனமிருக்கையில், மனோன்மணி சேர அரசனாகிய புருடோத்தமனையே மணக்க உறுதி பூண்டிருப்பதையறிந்து, குடிலன் அதற்குத் தான் ஆவன செய்வதாக அரசனிடம் கூறி, மறைவாக வேறு திட்டமிட்டான்; தன் மகன் பலதேவனை மணம் பற்றிப் பேசப் புருடோத்தமனிடம் தூது செல்ல விடுமாறு அரசனிடம் கேட்டு அனுமதி பெற்றான்; ஆனால் பலதேவனிடம் மறைவாகப் புருடோத்தமனைச் சீவகன் மீது படையெடுத்து வரத் தூண்டுமாறு கூறினான்.

அவ்வாறே பலதேவன், சேர நாட்டிற்குத் தூது செல்லு முகத்தான் பகையை மூட்டப் புறப்பட்டான். மனோன்மணியின் மணத்தைப் பற்றி அவன் சேர மன்னனிடம் ஒன்றும் பேசாமல் அவனைப் பலவாறு இழிவாகப் பேசிப் பாண்டியன்மீது அவனுக்குச் சினமுண்டாகுமாறு செய்துவிட்டான். அதனால் சேரன், பாண்டியன் மீது படையெடுத்து வருவதாக அறிவித்தான். இச் செய்தியைப் பலதேவன் பாண்டியனிடம் வந்து, ஒன்று மறியாதவன் போல அறிவித்தான். குடிலனோ, தன் திட்டம் நிறைவேறப் போவதை எண்ணி மகிழ்ச்சியடைந்தான்.

சீவகன் சுத்த வீரன்; போர் முகத்தில் புறங் கொடாத பெரியோன். ஆகவே, அவன் எதிர் பாராமல் உண்டாகிய போருக்கு அஞ்சாது, எதிரியைத் தடுத்து வெல்வதற்கு வேண்டிய செயல்களை உடனே மேற் கொண்டான். அவன் தன் நாட்டு மக்களுக்கு மன உறு தியும் ஊக்கமும் உண்டாக்குமாறு அறிவும் வீரமும் செறிந்த ஓர் அரிய சொற்பொழிவை ஆற்றினன். அதைக்கேட்ட மக்கள் ஆயிரக் கணக்கில் போருக்குச் சித்தமாக எழுந்தனர்.

குடிலன் அந்நிலையிலும் சிறிதும் மானமும் நாட்டுப் பற்றும் அரச விசுவாசமும் இன்றித் தன் சதித் திட் டத்தை நிறைவேற்றுவதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தான்; ஆகவே, அவன் அரசனிடம் படை அணி வகுப்புப் பொறுப்பைப் பெற்று, எதிரியின் முன்னல் அப்படை தோற்றேடுமாறு செய்யச் சூழ்ச்சி செய்தான்; அரசனையும் தேர்ந்த வீரர்களையும் ஒரு புறமாக ஒதுக்கி வைத்துவிட்டுத் தானும் தன் மகன் பலதேவனும் படையில் முக்கியமான இடங்களில் நின்று போர் புரியப் போவதாக அறிவித்தான். இந்த நிலையில் கூட அரச னுக்குக் குடிலனது வஞ்சக எண்ணம் புலப்படவில்லை. அவனை உண்மையானவன் என்றே அரசன் நம்பி விட்டான்.

புருடோத்தமன் பெரும்படையுடன் திருநெல் வேலிக் கோட்டை மீது படையெடுத்து வந்துவிட்டான். உடனே போர் தொடங்கியது முதல் நாள், போர் நடை பெற்றுக்கொண்டிருக்கும் போது, குடிலன் சொற்படி பலதேவன், படையில் பெருங்குழப்பத்தை விளைவித்துப் படை தோற்றேடும்படி செய்துவிட்டான்.

பிறகு குடிலன் தான் அமைத்திருந்த இரகசியமான சுரங்க வழியாகப் புருடோத்தமனுடைய பாசறைக்குச் சென்று, அவனுக்குத் தான் போரில் உதவி செய்வதாயும் அதற்குக் கைம்மாருகச் சீவகன் இறந்துபட்டவுடன் தனக்குப் பாண்டி நாட்டு அரச பதவியை அளிக்குமாறும் அவனிடம் கூறினுன். புருடோத்தமன் சுத்த வீரனுகையால் குடிலனுடைய வஞ்சனையான யோசனையை ஏற்காது, அவன் கையில் தளை இட்டு அவனை அச்சுரங்க வழியே சீவகனிடம் அழைத்துச் சென்ருன்.

அச்சமயம் சீவகனுடைய அரச குருவாகிய சுந்தர முனிவர் குடிலன் செய்து வரும் சூழ்ச்சிகளை யெல்லாம் அறிந்து அவற்றினின்று அரசனைக் காப்பாற்ற விரைந்து வந்தார்; குடிலன் மனேன்மணியை ஓர் அறையில் பூட்டி வைத்திருந்ததை அவர் கண்டு, அவளை முதலில் விடுவித்து அரசனிடம் அழைத்து வந்தார். அப்போதுதான் புருடோத்தமனும் குடிலனுடன் அங்கு வந்து சேர்ந்தான். மனேன்மணி அவனைக் கண்டவுடன், தன் கனவில் தோன்றிய காதலன் அவனே என்பதையறிந்து அவன் முன் வெட்கித் தலைகுனிந்து நின்ருள்; புருடோத்தமனும் அவளைக் கனவில் கண்டு, அவளையே மணக்க எண்ணியிருந்ததால், அவளை நேரில் அங்குக் கண்டதும் பெருவியப்பெய்தி நின்ருன். அவ்வளவில் சுந்தர முனிவர் அவ்விருவரையும் பார்த்து, உடனே மாலையிட்டு மணம் புரியுமாறு கூறினுர். அங்ஙனமே இருவரும் திருமணம் புரிந்துகொண்டனர்.

குடிலனது பொல்லாச் சூழ்ச்சிகளை யறிந்த சீவகன், தான் அவனை முழுவதும் நம்பி இருந்தமைக்கு வருந்தி

னான்; தக்க சமயத்தில் சுந்தர முனிவர் வந்து இன்னல்களைத் தவிர்த்தமைக்கு அவரிடம் பெரிதும் நன்றி காட்டினான். பிறகு அவன் குடிலனை நாடு கடத்திவிட்டுக் கவலையின்றி ஆட்சி புரிந்து வந்தான்.

## கேள்விகள்

1. குடிலனது திட்டம் யாது?

2. அதை நிறைவேற்ற, முதற்படியாக அவன் என்ன செய்தான்?

3. பலதேவனைக் குடிலன் புருஷோத்தமனிடம் தூதனுப்ப விரும்பியது ஏன்?

4. பலதேவன் சேரனிடம் போய் என்ன செய்தான்?

5. குடிலன் ஏன் படை அணிவகுப்புப் பொறுப்பைப் பெற்றான்?

6. குடிலன் புருடோத்தமனிடம் இரகசியமாகக் கூறியது என்ன? அதற்குப் புருடோத்தமன் யாது செய்தான்?

7. சுந்தர முனிவர் எவ்வாறு தக்க சமயத்தில் வந்து உதவினர்?

8. இறுதியில் குடிலன் கதி யாதாயிற்று?

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் அமைக்க :—

வெள்ளை மனம், முதற்படியாக, நிறைவேற்றுதல், பொறுப்பு, உறுதிபூண்டு, அனுமதி, புறங்கொடுத்தல், மேற்கொள்ளுதல் கண்ணும் கருத்துமாக.

2. எதிர்ப்பதம் தருக:—

வஞ்சம், உறுதி, வீரன், மறைவாக, பகைமை, பெரியோன், அரிய தேர்ந்த, குழப்பம், பொல்லாத.

## அருஞ்சொற்பொருள்

கள்ளம்—வஞ்சனை, புறங்கொடாத — தோற்றோடாத, கரந்துறை வழி—இரகசியமான சுரங்க வழி, செறிந்த—நிறைந்த. பாசறை—பாடி வீடு, கைம்மாறு-திரும்பச் செய்யப் படும் உதவி, தளை—விலங்கு, நாடு கடத்துதல்-நாட்டைவிட்டு வெளியேற்றுதல்.

# 14. நமது தலைவர் காமராஜர்

இப்பொழுது நம் சென்னை மாநிலத்திற்கு முதல் அமைச்சராக விளங்குபவர் நமது காமராஜர் என்னும் சிறந்த தேசத் தொண்டர். அவர் சாதாரண தேசத் தொண்டராயிருந்து மிக உயர்ந்த நிலையை அடைந்திருக்கிறார். அவரது இவ்வெற்றியின் இரகசியமென்ன? அவரது வாழ்க்கையைப் பற்றித் தெரிந்துகொண்டால் அது உங்களுக்கு விளங்கும்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் விருதுநகர் என்னும் ஊரில் திரு. காமராஜர் அவர்கள் குமாரசாமி நாடார், சிவகாமி அம்மையார் என்னும் இருவருக்கும் 1903-ஆம் ஆண்டு, ஜூலை, 15ஆம் நாள் அருமகவாகத் தோன்றினார். காமராஜரது ஆறுவது வயதில் அவருடைய தந்தையார் காலமாகி விடவே தாயாரே அவரை வளர்க்கும் முழுப்



திரு. காமராஜர்

பொறுப்பையும் ஏற்றார். தம்மைக் கல்வி கேள்விகளால்

சான்ருேராக்கும் கடமையுடைய தந்தை இறந்துவிட்ட தால் காமராஜருக்கு இளமையில் உயர்தரக் கல்வி பயிற்றுவிப்பவர் இல்லாது போயினர். எனினும் அவரது தாயாரே அவருக்கு ஓரளவு கல்வியளித்துத் தந்தையின் கடமையையும் ஆற்றினுர்.

காமராஜருடைய மாமன் ஒருவர் விருதுநகரில் ஜவுளி வியாபாரம் செய்து வந்தார். அவர் அதில் காமராஜரை உதவியாளராக அமர்த்திக்கொண்டு வணிகத் துறை நுட்பங்களேக் கற்பித்தார். அப்பொழுது அவருக்கு வயது பதினைந்துகூட இல்லே. அக்கடையில் இருக்கும்போது அவர் நாள்தோறும் செய்தித் தாள்களே ஊன்றிப் படிப்பார். ஐரோப்பாவில் அப்போது முதலாவது உலகப் பெரும்போர் நடந்துகொண்டிருந்தது. அச்செய்திகளே யெல்லாம் காமராஜர் கண்ணும் கருத்துமாய்ப் படிப்பார். அன்றியும், அக்காலேயில் நம் நாட்டில் தோன்றியிருந்த சுயராஜ்யக் கிளர்ச்சி சம்பந்தமாகப் பெருந்தலேவர்கள் செய்துவந்த செயல்களேயும் பேசி வந்த பேச்சுக்களேயும் அவர் கருத்தூன்றிக் கவனிப்பார். இவற்ருல் அவருக்குப் பொது அறிவும் நாட்டுப் பற்றும் தோன்றி வளரலாயின. அது மட்டுமன்றிப் பொது மக்களுக்கும் நாட்டுக்கும் தொண்டு செய்ய வேண்டுமென்னும் எண்ணமும் அவரது மனத்தில் வேரூன்றியது.

தமிழ் நாட்டில் சத்தியமூர்த்தி, சீனிவாசையங்கார் போன்ற தலேவர்கள் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்து தம் உணர்ச்சி மிகுந்த சொற்பொழிவுகளால் மக்களேத் தூண்டி வந்தனர். அச்சொற்பொழிவு

களுக்கு நமது காமராஜர் தவருது செல்வது மட்டு மன்றிக் கூட்டங்களைக் கூட்டியும் அவற்றிற்கான ஏற்பாடு களைச் செய்தும் பொதுத் தொண்டு புரிந்து வந்தார். அக்காலத்தில் நம்மை ஆண்டு வந்த அந்நிய அரசாங் கம் பொதுத் தொண்டில் ஈடுபடுபவர்களை அரசாங்கத் தின் எதிரிகள் என்று எண்ணி அவர்களைத் தண்டித்து வந்தது. எனினும் நம் காமராஜர் அதற்கு அஞ்சாமல் தம் தொண்டுகளை ஆற்றி வந்தார். அவர் பொதுத் தொண்டினை இடைவிடாமலும், இடையூறின்றியும் செய்ய விரும்பியதால், திருமணம் செய்துகொள்ளவும் மறுத்து, இன்றளவும் குடும்ப வாழ்க்கையைத் துறந்து வாழ்ந்து வருகிருர். இதிலிருந்து அவரது நாட்டுப் பற்று எத்துணை உறுதியும் உயர்வும் உடையது என்று நாம் அறியலாம்.

காமராஜர் வாணிகத்தின் பொருட்டுப் போடிநாயக் கனூர், திருவனந்தபுரம் ஆகிய இடங்களில் சிறிது காலம் தங்கியிருந்த போதும் இவ்வாறே பொதுத் தொண்டில் தம் காலத்தைக் கழித்து வந்தார். இவற்ருல் அவருக்குத் தேசீய இயக்கத்தை நடத்தும் திறமையும் நிறுவன அமைப்புத் திறனும் இளமையிலேயே உண் டாயின.

இதற்கிடையில் நம் நாட்டில் தேசீய இயக்கம் வலு வடைந்து கொண்டு வந்தது. 1930 ஆம் ஆண்டில் மகாத்மா காந்தி அவர்கள் உப்புச் சத்தியாக்கிரகம் என்ற அறப்போரை நடத்தினர். மக்கள் அரசாங்கத் தின் அனுமதியின்றிக் கடல் நீரிலிருந்து உப்பு விளை வித்துக் கொள்ளலாம் என்பது அப்போராட்டத்தின் குறிக்கோள். அதற்கு அரசாங்கம் தடையாய் இருந்தது.

ஆகவே, மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் போராட்டம் தொடங்கியது. மகாத்மா காந்தி அவர்கள் அப்போராட்டத்தை இந்தியா முழுவதிலும் தலைமை தாங்கி நடத்தினார். அப்போது நமது காமராஜர் அப்போராட்டத்தில் கலந்துகொண்டதால் அரசாங்கம் அவருக்கு இரண்டாண்டுகள் சிறைத்தண்டனையளித்தது. ஆனால் ஓராண்டு சிறையிலிருந்த பின் அவர் விடுவிக்கப்பட்டார்.

1931இல் மதுரையில் சத்தியமூர்த்தி தலைமையில் ஒரு பெரிய தேசீய மாநாடு கூடிற்று. அக்கூட்டத்திற்குக் காமராஜர் மிகப் பெரிய அளவில் ஏற்பாடுகளைச் செய்து அதை வெற்றியுடன் நடத்தினார். அவ்வாண்டு தமிழ் நாடு காங்கிரஸ், அகில இந்திய காங்கிரஸ் குழு ஆகியவற்றின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இது முதன் முறையாக அவர் பெற்ற பெருமைக்குரிய பொறுப்பாகும். பிறகு 1936இல் சத்தியமூர்த்தி தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராய் வந்த போது காமராஜரை அவர் செயலாளராக நியமித்தார். இப்பொறுப்பும் மிகப் பெருமை வாய்ந்தது. அதைக் காமராஜர் மிகத் திறம்படத் தாங்கி நடத்தினார். அடுத்த ஆண்டு நம் நாடு முழுவதிலும் நடந்த சட்டசபைத் தேர்தல்களில், காமராஜர் விருதுநகரிலிருந்து எதிரியின்றி ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இது அவருக்கு ஒரு தனிப்பெருஞ் சிறப்பன்றோ?

1940ஆம் ஆண்டு தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் தேர்தலில் காமராஜர் வெற்றிபெற்று அதன் தலைவரானார். காங்கிரஸ் இயக்கத்தில் அவர் பெற்ற மிகப்பெரிய இடம் இது. அதன் பிறகு அவர் தொடர்ச்சியாகப் பல ஆண்டுகள் இப்பொறுப்பைத் தாங்கியிருக்கிறார்.

காமராஜர் காங்கிரஸ் நிறுவன வேலைகளில் அதிக அநுபவமும் திறமையும் உடையவர். மிகச் சாதுரிய மாகவும் உறுதியாகவும் நின்று அவர் செயலாற்றுவார். அவரைப் போல் காங்கிரஸ் நிறுவன வேலைகளின் முழு இரகசியங்களையும் அறிந்தவர் எவருமில்லையென்றே கூறலாம். அவர் அவ்வேலையை முழு நேர வேலையாகவே செய்வார்; குடும்ப வேலைகளையும் வருவாய்க்குரிய தொழில்களையும் பெரிதாக மதியாது காங்கிரஸ் பணி களையே தம் சொந்த வேலையாகக் கருதிச் செய்வார்.

1941இல் அவர் மீண்டும் பிரிட்டிஷ் அரசாங்கத்தை எதிர்த்து அறப்போரில் ஈடுபட்டுச் சிறையில் இருந்த போது விருதுநகர் நகராண்மைக் கழகத்தார் ஒருமன தாக அவரை நகராண்மைக் கழகத் தலைவராகத் தேர்ந் தெடுத்தார்கள். அடுத்த ஆண்டு அவர் சிறையிலிருந்து வந்ததும் ஒருநாள் மட்டும் அப்பதவியைத் தாங்கிப் பிறகு விலகிவிட்டார். இதனால் அவருக்குக் காங்கிரஸ் ஊழியம் தவிர மற்றப் பெருமை தரும் பதவிகளில் விருப்பமில்லை என்பதை அறியலாம்.

அடுத்த ஆண்டு நடந்த "ஆகஸ்டு புரட்சி" என் னும் இயக்கத்தில் சேர்ந்து காமராஜர் மீண்டும் மூன்று ஆண்டுகள் சிறை சென்றார். 1947இல் அவர் சென்னைச் சட்டசபை உறுப்பினர்களின் சார்பாக டில்லியில் உள்ள அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதனால் அவருக்கு நம் நாட்டின் அரசியலமைப்பை உருவாக்கும் அரிய வாய்ப்பும் கிடைத்தது.

பின்னர்க் காமராஜர் தமிழர்கள் உள்ள கடல் கடந்த நாடுகளாகிய இலங்கை, மலேயா முதலிய இடங்களுக்குச் சென்று அவர்களின் அன்பும் ஆதரவும் பெற்றார்.

1954இல் சென்னை மாநிலத்தின் முதலமைச்சராய் இருந்த ராஜாஜி விலகிக் கொண்டார். ஆதலால்சென்னை சட்டசபைக் காங்கிரஸ் கட்சியார் காமராஜரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். உடனே அவர் சென்னை மாநிலத்தின் முதலமைச்சரானார். அப்பொறுப்பை அவர் மிகத் திறமையோடு தாங்கி மக்களுடைய அன்புக்கும் அதிகாரிகளுடைய மரியாதைக்கும் இலக்காக விளங்கி வருகிறார்; நாட்டிற்கு நலம் தரும் திட்டங்கள் பல நிறைவேற்றி வருகிறார்; தொடக்கப் பள்ளிகளில் சிறுவர்க்கும் உயர்நிலைப் பள்ளிகளில் ஏழை மாணவர்களுக்கும் இலவசக் கல்வி ஈந்து பேருபகாரச் செயலைப் புரிந்து வருகிறார்! உழவர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் நன்மைகள் பல செய்வதில் முனைத்திருக்கின்றார்.

நம் நாட்டில் ஆங்கிலப் பட்டம் பெற்றவர்களும் சட்டம் கற்றவர்களுந்தான் தலைவர்களாகவும், முதலமைச்சர்களாகவும் வரமுடியும் என்று இது வரையில் இருந்த தவறான கருத்தை அவர் அறவே அகற்றிவிட்டார். காமராஜர் பள்ளிப் படிப்பு அதிகம் படிக்கவில்லை என்றாலும் இயற்கை அறிவு திண்மையாகப் பெற்றவர். அன்றியும், அவர் மிகவும் படித்தவர்களும் போற்றக் கூடிய பண்புகளையுடையவராய் இருக்கிறார். பேரறிவாளிகளும் அவரிடம் யோசனை கேட்கும் நிலையில் அவர் விளங்குகிறார். அவர் அதிகம் பேசுபவரல்லர். அதிகம்

பேசுவதில் அவருக்கு நம்பிக்கையில்லை! செயலாற்றுவதில்தான் முழு நம்பிக்கை உண்டு. ஆகவே, அல்லும் பகலும் செயலாற்றுவதிலேயே அவர் முனைந்து நிற்பார். அவர் ஒன்றிரண்டு சொற்கள் சொன்னாலும் அவைகளுக்கு அதிக மதிப்புண்டு. பெரிய கூட்டங்களைக் கூடச் சில சொற்களால் அவர் தம் பக்கம் திருப்பிவிடுவார்.

காமராஜருக்கு நாட்டிலுள்ள மக்களின் தொடர்பும் ஆதரவும் அதிகம். அவர் ஏழைகளின் நண்பர். இயல்பாகவே அவர் செல்வருடன் சேர விரும்புவதில்லை. அவர் அமைதியும் ஆழமும் உடையவர்; சினம் என்பது சிறிதும் இல்லாதவர் எதிர்ப்புகளை வெல்வதிலும் இணையற்றவர்; மக்களின் மனநிலையை மிக எளிதில் உணர்ந்துகொள்ளக்கூடிய கூர்த்த மதியுடையவர்; அவசரப்பட்டு எக்காரியத்தையும் செய்யமாட்டார். எல்லா மக்களும் மதித்துப் போற்றும் வண்ணம் அவர் எக்காரியங்களையும் மதித்துப் போற்றும் வண்ணம் அவர் எக்காரியங்களையும் செய்து வருகிறார். ஓயாத உழைப்பு, தன்னலமற்ற தொண்டு, நடுவு நிலைமை, நாட்டுப்பற்று, மன உறுதி, மக்களின் நன்மதிப்பைப் பெற வேண்டுமென்னும் ஆவல், ஆகிய இவைதான் அவரது வெற்றிக்கு அடிப்படையான காரணங்கள். நம் காமராஜர் இன்னும் நாட்டுக்கு வேண்டிய நற்பணிகள் பல ஆற்றி நீடூழி வாழ்வாராக!




### கேள்விகள்

1. காமராஜருக்கு எவ்வாறு பொது அறிவும் நாட்டுப் பற்றும் உண்டாயின?

2. அவர் இளமையில் ஆற்றிய பொதுத்தொண்டு யாது?

3. காங்கிரஸ் அமைப்பில் அவர் எப்பொழுது முதல் முதலாகப் பொறுப்பைப் பெற்றார்? அப்பொறுப்பு யாது?

4. அவர் எவ்வெப்பொழுது எதற்காகச் சிறை சென்றார்?

5. அவர் முதலமைச்சராக இருந்து ஆற்றிவரும் பணிகள் யாவை?

6. அவரது குண நலன்களைத் தொகுத்துக் கூறுக.

## பயிற்சி

1. நம் நாட்டில் உள்ள மற்றொரு தேசியத் தலைவரது வாழ்க்கையை 20 வரிகளில் சுருக்கித் தருக.

2. எதிர்ப்பதங்கள் கூறுக:— இரகசியம், பொதுநலம், உயர்வு, உறுதி, புரட்சி, இயற்கையறிவு.

3. சொந்த வாக்கியங்களில் அமைக்க:— கண்ணுங் கருத்துமாக, கருத்தூன்றி, இயற்கையறிவு, கூர்த்த மதி, நன்மதிப்பு, வேரூன்றுதல், குறிக்கோள்.

## அருஞ்சொற்பொருள்

அருமகவு—அருமையான குழந்தை; சான்றோர்—கல்வி கேள்விகளில் நிறைந்தவர்; நிறுவனம்—ஸ்தாபனம்; அறப் போர்—போர்க் கருவிகள் இன்றிச் செய்யப்படும் சாத்வீகப் போராட்டம்; குறிக்கோள்—இலட்சியம்; கூர்த்த—கூர்மையான, மிகுதியான.

———

# 15. வனவிலங்குகள்—யானை.

நம் நாட்டில் இமய மலையின் தென்கீழ்ப்பகுதிகளாகிய வங்காளம், அஸ்ஸாம் மேற்குத்தொடர்ச்சி மலைப் பகுதிகளாகிய மைசூர், திருவாங்கூர் முதலிய இடங்களில் பல அடர்ந்த காடுகள் இருக்கின்றன. இக்காடுகளில் புலி, சிங்கம், சிறுத்தை, கரடி, யானை, காண்டாமிருகம் முதலிய கொடிய வனவிலங்குகள் பல வாழ்கின்றன. இவற்றுள் யானையைப் பற்றி இப்பாடத்தில் சிறிது தெரிந்துகொள்வோம்.

யானைகளில் பல வகை உண்டு. அவற்றை முதலில் ஆசியா யானைகள், ஆப்பிரிக்கா யானைகள் என்று இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஆசியா யானைகள் சுமார் பத்தரை அடி உயரத்திற்குமேல் வளர்வதில்லை. அவற்றின் மத்தகம் இரு பிரிவுகளாக இரண்டு பெரிய கும்பங்களை அடுத்தடுத்துக் கவிழ்த்து வைத்தது போல இருக்கும். காதுகள் பெரிய முறங்கள் போலவும் விளிம்புகள் சதுரமாகவும், கழுத்துப் பக்கமாக சாய்ந்தும் இருக்கும். அவை சுமார் 16 அடி நீளமும் 5 டன் எடையும் உள்ளவை. சுமார் 5 அடி நீளமுள்ள கொம்புகள் இவற்றிற்கு உண்டு. ஆப்பிரிக்கா யானைகள் சுமார் பன்னிரண்டடி உயரம்வரை வளர்ந்திருக்கும். தட்டையான மத்தகத்தையும் மிகப்பெரிய வட்டமான விளிம்புகளையுடைய காதுகளையும் உடையவை அவை. காதுகள் கழுத்தின் பக்கமாக அன்றிமுகத்தின் பக்கமாக மடங்கியிருக்கும். சில ஆப்பிரிக்கா யானை

கள் 25 அடி நீளமும், ஆறரை டன் எடையும் உடைய வையாக இருக்குமென்று சொல்லுகிறார்கள். இவைகளின் கொம்புகள் 6 அடி நீளத்திற்கு மேலும் இருக்கும். ஆப்பிரிக்காவில் குட்டையான ஆறடி உயரமுள்ள யானை இனங்களும் சில உண்டு. அவற்றில் ஓரினம் தண்ணீரிலும் வாழும் இயல்புடையது. இவை நீர் யானையின் இனத்தினின்றும் வேறானவை. யானைகள் முதன் முதலில் ஆப்பிரிக்காவிலேதான் தோன்றின என்றும், பிறகு அவை மற்றக் கண்டங்களுக்கும் பரவின என்றும் விலங்கு நூல் வல்லார் கூறுவர். நான்கு கொம்புகளையுடைய யானைகளும், பதின்மூன்றடி உயரமான மற்றும் சிலவகை யானைகளும் முன்னொரு காலத்தில் இருந்தன என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்கள்.

யானை மிக வியப்பிற்குரிய விலங்கு. யானைகளின் குன்றுபோன்ற மிகப்பெரிய உருவமும் நீண்ட தும்பிக்கையும் உலகில் வேறெந்த விலங்குக்கும் இல்லை. அவை மிகப் புத்திக் கூர்மையும் நினைவாற்றலும் உடையவை. பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சியையும் அவை மறப்பதில்லை. அவை சுமார் 100 முதல் 150 ஆண்டுகள் வரையில் உயிர் வாழும். முதல் 25 ஆண்டுகள்தான் அவற்றின் வளர்ச்சிப் பருவம். அவை மிகப் பெரிய உடலைப் பெற்றிருப்பினும், மணிக்கு இருபது மைல் வேகத்தில் ஓடவும், தண்ணீரில் எளிதில் நீந்தவும், மலைகள் மீது வேகமாக ஏறவும் கூடும். பெரிய செங்குத்தான மலைச் சரிவுகளிலிருந்து இறங்கும் போது அவை தம் உடலை முன்னும் பின்னும் ஜாக்கிரதையாக அசைத்து ஊசலாடி, கீழே சறுக்கிவிடாமல் இறங்கும். காடுகளில்

அவை மிக ஒழுங்காக அணிவகுத்துச் செல்லும்; தனியே செல்லாமல் எப்பொழுதும் பல சேர்ந்து ஒரு வரிசையாக வோ கூட்டமாகவோ செல்லும். அப்போது குட்டிகளை யும் பெண் யானைகளையும் ஆண் யானைகள் பாதுகாத்துச் சூழ்ந்து செல்லும். அவை இரவில் கூட்டமாக நீர் நிலை களில் தண்ணீர் பருகவும் குளிக்கவும் வரும். அப்போது சுற்றிலும் எங்கேனும் தம்மைக் கொல்ல எதிரிகள் (மக்கள், புலி, சிங்கம் முதலிய கொடிய விலங்குகள்) மறைந்திருக்கக் கூடுமோ என்றறிய முதலில் ஒரு யானை மட்டும் தனியே முன்னால் செல்லும். மற்றவை பின்னே கூட்டமாகச் சிறிது தூரத்தில் இருக்கும். முன்னே சென்ற யானை, பகைவரை மோப்பத்தால் அறியத் தன் துதிக்கையைச் சுழற்றிக்கொண்டே உற்று நோக்கிய வண்ணம் சென்று நீர் நிலையை அடைந்ததும், எதிரிகள் ஒருவரும் இல்லை என்பதை அறிவிக்க ஒரு விதமாகப் பிளறி ஓசை செய்யும். அவ்வோசையைக் கூட்டத்தில் உள்ள மற்ற யானைகள் கேட்டவுடனே தாம் வருவதை அறிவிக்கப் பதிலுக்கு மற்றொரு ஓசை செய்து, அவ்விட மிருந்து நீங்கி மெதுவாகச் சுற்றிலும் பார்த்துக்கொண் டே நீர் நிலையை அடையும். பிறகு அவை நெடுநேரம், நீரில் இறங்கி விளையாடி, வேண்டிய மட்டும் நீர் பருகி விட்டுப் பிறகு வெளியே செல்லும்.

காட்டில் இயற்கையாக வாழும் யானைகள் எதிரி களைக் கண்டவுடன் மிகவும் சினங்கொண்டு தாக்கத் தொடங்கும். தன் எதிரிகளை யானை தன் துதிக்கையால் சாடியும் இறுகப் பற்றித் தூக்கி நிலத்தில் அறைந்தும், ஆறடிச் சுற்று வட்டமுள்ள தனது பெரிய தூண் போன்ற கால்களால் எற்றியும் மிதித்தும் கொன்று

விடும். புலி, சிங்கம் முதலிய கொடிய விலங்குகள் அதன் கொம்புகளுக்கும் துதிக்கைக்கும் அஞ்சி, முன்புறமாக அன்றிப் பின் புறமாக அதன்மேல் பாய்ந்து, மத்தகத்தின் மீது ஓங்கி அறைந்து, மூளையில் அதிர்ச்சியை உண்டாக்கிக் கீழே வீழ்த்திப் பிறகு கொன்று தின்னும். காடுகளில் மீது வன்மம் கொண்டு பழி தீர்க்கத் தருணம் பார்த்துக் கொண்டிருக்கும். அவர்களைக் கண்டவுடன் அவை புதர்கள், மரங்கள் ஆகியவற்றின் பின்னல் மறைந்திருந்து ஓசைப்படாமல் திடீரென்று ஓடிவந்து சாடும்; அவர்கள் அமைந்திருக்கும் தோட்டங்கள், வீடுகள் முதலியவற்றை அழித்துத் தரைமட்டமாக்கிவிடும். மக்களால் பழக்கப்பட்ட யானைகள்கூடச் சில சமயங்களில் தமக்குத் தீங்கிழைத்தவர் மீது கட்டுக்கடங்காத கோபத்துடன் பாய்ந்து கொன்றுவிடும். ஆப்பிரிக்காவில் உள்ள யானைகள் சில சமயங்களில் ரயில் வண்டிகளைத் தாக்கிக் கீழே தள்ளிவிடுகின்றன. ஆகையால், அவற்றைக் கண்டவுடன் சுட்டுக் கொன்றுவிடுவார்கள்.

ஒரு முறை ஒரு யானையானது தன்னை வேட்டையாட வந்த சில மக்களைத் துரத்திச் சென்றது. அவர் பிறகு அஞ்சி ஓடி ஒரு மரத்தின் மீது ஏறிக்கொண்டனர். பிறகு அது, அம்மரத்தைத் தன் துதிக்கையால் பற்றிச் சாய்க்க முயன்றது. முடியாது போகவே, அருகில் கிடந்த சில பெரிய மரத் துண்டுகளை ஒன்றின் மீது ஒன்ருக மேடைபோல் அடுக்கி அதன்மேல் ஏறி அவர்களைப் பிடிக்க முயன்றது. அதற்குள்ளாக அம்மனிதர்கள் துப்பாக்கியால் அதைச் சுட்டு வீழ்த்திவிட்டார்கள்.

மற்றொரு முறை அஸ்ஸாம் காட்டில், ஒரு யானைக்கும் காண்டா மிருகத்திற்கும் ஓர் உக்கிரமான போர் நடந்தது. யானையைவிடக் காண்டாமிருகம் சிறியதாயினும், நீண்ட போருக்குப் பின், அது யானையைத் தன் தலைமீதுள்ள கொம்பினாலும், கடைவாயிலுள்ள தந்தத்தாலும் தாக்கித் தோற்கடித்து விரட்டிவிட்டது. அக் காண்டாமிருகம் 6 அடி உயரமும், 4 டன் நிறையும் உடையதாய் இருந்தும் அதன் வலிமையும் தற்காப்புக் கருவிகளும் யானையின் வலிமையையும் தந்தங்களையும் மிஞ்சிவிட்டன. யானையின் தோல் மிகவும் கடினமானது; அத்தோலின் நிறைமட்டும் ஒரு டன் இருக்கும். எனினும், அது அதிக வெப்பத்தைத் தாங்க முடியாது. வெப்பத்தினின்றும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள அது தன் துதிக்கையால் நீரை முகந்து உடம்பின்மீது சொரிந்து கொள்ளும், அல்லது புழுதி, சகதி ஆகியவற்றையும் உடம்பின்மீது பூசிக்கொள்ளும். ஈ முதலிய பூச்சிகள் தன்மீது உட்கார்ந்து துன்புறுத்தாமலிருக்கவும் அது சேற்றைப் பூசிக்கொள்ளும் என்று கூறப்படுகிறது. அது பெரிய மரக்கிளைகளை முறித்து அவற்றால் தன்மீது காற்றை வீசிக்கொண்டு வெப்பத்தைத் தணித்துக்கொள்ளும். இக்காட்சி காண்பதற்கு மிக விநோதமாக இருக்கும்.

யானையின் துதிக்கை அதன் உடலமைப்பில் மிக வியப்புக்குரிய உறுப்பாகும். அதில் ஒரு நீண்ட புழை உண்டு. அதனால் அது சுவாசிப்பது மட்டுமன்றித் தண்ணீரைப் பருகவும், தானியங்களை உறிஞ்சி எடுத்து வாயில் போட்டுக்கொள்ளவும் செய்யும். கீழே கிடக்கும் சிறு பொருள்களைக்கூட அது தன் துதிக்கையினால்

எளிதில் எடுத்துவிடும். தனக்கு உணவாகக்கூடிய இலைகளையும் கிளைகளையும் அது துதிக்கையால் ஒடித்து வாயில் வைத்துக்கொண்டு தின்னும்.

யானையின் கொம்புகள் அல்லது தந்தங்கள் நீண்டு மேல்நோக்கி வளைந்து பிறைகள் போன்ற வடிவுடையவையாய் இருக்கும். அவை எதிரிகளைக் குத்தி வீழ்த்தித் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள உதவும் கருவிகளாகும். யானைகள் தம் கொம்புகளால் நிலத்தை அகழ்ந்து கிணறுகள் தோண்டவும் பழக்கப்பட்டுள்ளன. யானையின் தந்தம் அதிக விலை மதிப்புள்ளது. யானையின் மதிப்பு அதன் தந்தத்தைச் சார்ந்ததே. யானை இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன் என்ற பழமொழி இக்காரணத்தால் தோன்றியதே.

மக்களால் பழக்கப்பட்ட யானைகள் பல வேலைகளுக்கு உதவுகின்றன. காடுகளில் வெட்டி வீழ்த்தப்படும் பெரியமரங்களை இழுத்துக்கொண்டு வந்து அடுக்க அவை அதிகமாகப் பயன்படுகின்றன. கோயில்கள், அரண்மனைகள், மடங்கள் முதலிய இடங்களில் அழகுக்காகவும் ஆடம்பரத்திற்காகவும் அவை வளர்க்கப்பட்டு, ஊர் வலங்களில் அலங்கரிக்கப்பட்டு முன்னே செலுத்தப்படும். யானை தன் பாகனுக்குக் கீழ்ப்படிந்து, அவன் இட்ட சிறு பணிகளையெல்லாம் செய்யும். பாகனது வீட்டுக் குழந்தைகளை அது அன்புடன் பாதுகாக்கும் என்றும், அவனுக்குக் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துக் கொடுக்கும் என்றும் சொல்கிறார்கள். அது அவனிடம் மிக்க நட்புடன் இருக்கும். சில சமயங்

களில் அது தன்னை வளர்த்தவன் இறந்துவிட்டால் தனியே உயிர்வாழ முடியாமல் இறந்துவிடும். வேலைகள் செய்ய விருப்பமில்லாத நிலையில் அது கீழே படுத்துக் கிடந்து உயிரை விட்டுவிடும்.

ஒரு சமயத்தில் இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்கு அழைத்துச் செல்லப்பட்ட யானை ஒன்று, அங்குச் சென்ற பிறகு வேலை செய்ய மறுத்துவிட்டது. இரண்டு ஆண்டுகள் அது அவ்வாறு இருந்த பிறகு, அதனை இளமையில் பழக்கிய பாகனை வரவழைத்து அதற்கு அறிவு புகட்டச் சொன்னார்கள். அவன் அவ்வாறே அதற்குச் சில சொற்களைச் சொன்னவுடன், அது கீழ்ப் படிந்து வேலை செய்யத் தொடங்கியது. இதிலிருந்து யானை தனது நண்பனுக்கு எங்ஙனம் கட்டுப்பட்டு நடக் கிறது என்று அறியலாம்.

யானைகள் மிகப் பெரிய உருவும் அரிய திறலும் பெற் றிருப்பினும் திடீரென உண்டாகும் கொடிய ஓசைகளைக் கேட்பின் அஞ்சி ஓடிவிடும். அதனிடம் உள்ள இக் குறையைப் பயன்படுத்தி அதனை மக்கள் வேட்டையாடிப் பிடிப்பர். கூட்டமாகச் செல்லும் யானைகளின் அருகில் மறைந்திருந்து துப்பாக்கி வெடி ஓசையையோ, கொடிய பறை ஓசையையோ உண்டாக்கினால், அக்கூட்டம் கலைந்து, அஞ்சி இடிபோல முழங்கி நாற்புறமும் சிதறி விடும். அப்போது அவற்றைப் பெரிய பொய்க் குழிகளில் விழும்படி செய்து விடுவார்கள்; பிறகு சங்கிலியால் கட்டி அங்குசத்தால் குத்தி அடக்கிச் செலுத்திச் செல்வார்கள். அக்குழிகளினின்றும் அவற்றை வெளியே தூக்குவதற்கு அவற்றுடன் பிணைக்கப்பட்ட பெண் யானைகள் தம் கைகளைக் கொடுத்து உதவும்.

யானைகளும் மற்ற விலங்குகளும் ஒரு நாட்டின் செல்வமாகும். அவற்றை வேட்டையாடி அழிப்பது கூடாது என்று இக்காலத்தில் அரசாங்கமும் பொது மக்களும் வற்புறுத்தி, அவற்றைப் பாதுகாப்பதற்கான நடைமுறைகளை மேற்கொண்டு வருகிறார்கள். இது மிகவும் போற்றத் தகுந்த செயலாகும்.

## கேள்விகள்

1. நம் நாட்டில் எங்கெங்கு அடர்ந்த காடுகள் உள்ளன?
2. யானைகளின் வகைகளைக் கூறுக.
3. யானையின் தோற்றத்தையும் இயல்புகளையும் சுருக்கிக் கூறுக.
4. யானைகள் நீர்நிலைகளுக்குச் செல்லும்போது எங்ஙனம் முன் ஜாக்கிரதையாகச் செல்கின்றன?
5. யானையின் துதிக்கையின் அமைப்பையும் பயனையும் கூறுக.
6. யானையின் கொம்புகளால் அதற்கும் பிறருக்கும் பயன் என்ன?
7. யானைகள் மக்களுக்கு எவ்வெவ் வழிகளில் உதவுகின்றன?

## பயிற்சி

1. யானைகளைப் பற்றி வழங்கும் கதை ஒன்றை எழுதுக.

## அருஞ்சொற்பொருள்:

கும்பம்—குடம்; மத்தகம்—தலை; பிளிறுதல்—யானை கத்தும் ஓசை; சாடுதல்—அடித்தல், அறைதல்; எற்றுதல்—உதைத்துத் தள்ளுதல்; தருணம்—சமயம்; வன்மம்—பகை; புழை—துவாரம்; அகழ்ந்து—தோண்டி; திறல்—வன்மை.

# செய்யுட் பகுதி

## 1. வாழ்த்து

1. வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே
வானம் அளந்த தனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழியவே
ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே!
சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி ஓங்கத்
துலங்குக வையகமே
தொல்லை வினைதரு தொல்லை அகன்று
சுடர்க தமிழ்நாடே
வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி
வாழ்க தமிழ்மொழியே
வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழியவே!

—பாரதியார்

2. மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட
மன்னருமென்
பண்கண் டளவில் பணியச்செய் வாய்படைப்
போன்முதலாம்

விண்கண்ட தெய்வம்பல் கோடியுண் டேனும்
விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வ முளதோ சகல
கலாவல்லியே ! — குமரகுருபரர்

3. உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே.
— கம்பர்

4. படமுடியா(து) இனித்துயரம் படமுடியா(து)
அரசே !
பட்டதெல்லாம் போதும் இந்தப்பயந்தீர்த்திப்
பொழுதென்
உடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன்
உடலுயிர் ஆ தியவெல்லாம் உவந்தெனக்கே
அளிப்பாய்;
வடலூர்ச்சிற்றம்பலத்தே வாழ்வாய்! என் கண்ணுள்
மணியே! என் குருமணியே! மாணிக்க
மணியே!
நடனசிகா மணியே! என் நவமணியே! ஞான
நன்மணியே! பொன்மணியே! நடராஜ
மணியே!
— இராமலிங்க சுவாமிகள்

## குறிப்புரை

1. பாரதியார்:— சுப்பிரமணிய பாரதியார், எட்டய புரத்தில் 1882 ஆம் ஆண்டில், அஃதாவது இன்றைக்கு 78 ஆண்டுகட்கு முன்னர்ப் பிறந்தார்; 1921 இல் மறைந்தார். இவர் தந்தையார் சின்னசாமி ஐயர்; தாயார், இலக்குமி அம்மாள். இவரது இளம்பருவம் தேசியக் கிளர்ச்சி ஏற்பட்ட காலமாதலால், அந்நியர் ஆட்சியினின்றும் தேசம் விடுதலை பெற மக்கட்கு வீரக்கனலை மூட்டும் பாட்டுகள் பல பாடியுள்ளார். இவர் இக்காலத்து தேசிய மகாகவி எனப் பாராட்டப்படுகிறார்.

நிரந்தரம்—எக்காலமும்; வானம் அளந்தது அனைத்தும்—வானம் கவிந்திடும் உலகமுழுவதும்; அளந்திடும்—தானம் வழங்குவதால் அளந்த; வண்மொழி—இனிமையான மொழி; வைப்பு—இடம்; இசை—புகழ்; சூழ்கலி - சூழ்ந்திருக்கும் துன்பம்; துலங்குக—விளங்குக; வையகம் – உலகம்; தொல்லை—பழைய; தொல்லை—துன்பம்; சுடர்க—விளங்குக.

2. குமரகுருபரர் :— இப்பாடல் சகலகலாவல்லி மாலையைச் சேர்ந்தது. இதனை இயற்றியவர், குமரகுருபர சுவாமிகள் என்பர். இவர் ஒப்புயர்வற்ற திப்பியப் புலமையாளர். இவரது பிறப்பிடம் திருநெல்வேலியை அடுத்தஸ்ரீவைகுண்டம். தந்தையார், சண்முகசிகாமணிக் கவிராயர். தாயார் சிவகாமிசுந்தரியம்மையார். குலம், வேளாளர் மதம், சைவம். இவர் நைட்டிகப்பிரமசாரி. காலம் 300 வருடங்களுக்கு முன். (16 ஆம் நூற்றாண்டின் கடைசிப் பகுதி)

மண் கண்ட—பூமியில் காணும்; கீழாக—கீழே உள்ள; மேற்பட்ட—மேலான, உயர்வான; பண்—பாடல் கண்டளவில் – கேட்டமாத்திரத்தில்; விண்கண்ட—தேவ லோகத்தில் காணப்படுகின்ற; விளம்பில்—சொல்லுமிடத்து; கலாவல்லியே—கலைவாணியே.

3. கம்பர் :— வடமொழியிலுள்ள இராமாயணத்தைத் தமிழில் பெருங்காப்பியமாக இயற்றிய பெரும் புலவர்; பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். சடகோபரந்தாதி, ஏரெழுபது முதலிய வேறு நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். இப்பாடல் கம்பராமாயணத்தில் முதலில் கடவுள் வாழ்த்தாக அமைந்தது.

தாம் உளவாக்கல்—தாமே உண்டாக்குதல்; படைத்தல்; நிலைபெறுத்தல்—காப்பாற்றுதல்; நீக்கல்—அழித்தல்; நீங்கலா—ஓயாத; அலகிலா — அளவில்லாத; சரண்—அடைக்கலம்.

4. இராமலிங்க சுவாமிகள்:— இவர் சுமார் நூறு வருடங்களுக்கு முன்பு சிதம்பரத்தின் அருகே உள்ள வடலூர் என்னுமிடத்தில் வாழ்ந்தவர். சமரச சன்மார்க்க நெறியைப் பரப்பியவர்; அருட்பெருஞ்சோதி என்றும் அருட்பெரு வள்ளல் என்றும் சிறப்பிக்கப்பட்டவர். இவரது பாடல்கள் பக்திச் சுவை மலிந்து அருள் நெறியை விளக்குபவை; உள்ளம் உருக்குபவை.

ஆதிய—முதலான; உவந்து—மகிழ்ந்து; நடன சிகாமணி—நடனமாடுகின்ற தலையில் சூடும் மாணிக்கம் போன்றவனே; நவமணியே—முத்து, மாணிக்கம், பவளம், வச்சிரம், வைடூரியம், நீலம், மரகதம், கோமேதகம், புட்பராகம் என்னும் ஒன்பது இரத்தினங்கள் போன்றவனே!

# 2. அறவுரை

## (i) திருக்குறள்

### 1. கல்வி

1. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.

2. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

3. கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்.

4. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

5. உடையார்முன் இல்லார்போலேக் கற்றுங் கற்றார்
கடையரே கல்லாதவர்.

6. தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குத்
கற்றனைத் தூறு மறிவு.

7. யாதானும் நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு?

8. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

9. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

10. கேடில் விழுச் செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

## 2. அடக்கமுடைமை

1. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும்.

2. காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

3. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றின் அடங்கப் பெறின்.

4. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

5. எல்லார்க்கும் நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வார்க்கே செல்வந் தகைத்து.

6. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து.

7. யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

8. தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

## 3. ஒழுக்கமுடைமை

1. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

2. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

3. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

4. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

5. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

6. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்று மிடும்பை தரும்.

7. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

8. உலகத்தொ டொட்ட வொழுகல் பலகற்றும்
கல்லா ரறிவிலா தார்.

## (ii) நாலடியார்

1. ஊர்அங் கணநீர் உரவுநீர்ச் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்;—ஓரும்
குலமாட்சி யில்லாரும் குன்றுபோல் நிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து.

2. கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும், தம்வாயால்
போர்த்துநாய் கௌவினர் ஈங்கில்லை;–நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மேன்மக்கள் தம்வாயால் மீட்டு?

3 பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு.

## (iii) சிறுபஞ்சமூலம்

1. தான்பிறந்த இல்நினைந்து, தன்னைக்கடைப்பிடித்துத்
தான்பிற ரால்கருதற் பா(டு)உணர்ந்து-தான் பிற
ரால் சாக எனவாழான்; சான்றோரால்பல்லாண்டும்
ஆக எனவாழ்தல் நன்று.

2. தேவரே கற்றவர்; கல்லாதார் தேருங்கால்
பூதரே; முன்பொருள் செய்யாதார்—ஆதரே;
'துன்பம் இலேம்பண்டு; யாமே வனப்புடையேம்'
என்பார் இருகால் எருது.

## (iv) சதகம்

### (1) தண்டலையார் சதகம்

துன்மார்க்கர்க் காயிரந்தான் சொன்னாலும்
மறந்துவிட்டுத் துடுக்கே செய்வார்;
சன்மார்க்கர்க் கொருவார்த்தை சொல்லும்போதே
மெய்யதனில் தழும்பாக் கொள்வார்;
பன்மார்க்க மறைபுகழும் தண்டலையா
ரேசொன்னேன், பதமே யான
நான்மாட்டுக் கோரடியாம் நற்பெண்டிர்க்
கொருவார்த்தை நடத்தை யாமே.

## 2. திருவேங்கட சதகம்

பெற்றதாய் தந்தைதன் சுற்றமே முதலான
 பெரியோரை முனிதல் வேண்டா;
பின்னென்று முன்னென்று பேசியே அவமானப்
 பேர்கொண்டு திரிதல் வேண்டா;
உற்றவர்கள் போலஉட் பகையான வஞ்சகரை
 ஒருநாளும் நம்பல்வேண்டா;
ஒருவருக் கிச்சையாய்ப் பொய்சொல்லிப் பின்
 ஊமைபோல் நிற்றல் வேண்டா; [சபையில்
சற்றுமே பொறுமையில் லாதவர்கள் சண்டையில்
 தான்போய் விலக்கல்வேண்டா;
தைரியந் தனில்விக்ர மாதித்தன் என்னினும்
 தன்னையே புகழ்தல் வேண்டா;
மற்றொன்றும் எண்ணாது செய்யல் வேண்டாவென்ப
 மணவாள நாராயணன்
மனதிலுறை அலர்மேலு மங்கைமண வாளனே!
 வரதவேங் கடராயனே!

## குறிப்புரை

### (i) திருக்குறள்

இதனை அருளிய பெரியார், திருவள்ளுவநாயனார் என்பவர். இவர் அவரித்த குலம் வள்ளுவக்குடி என்பர். வேறு சிலர் 'இப்பெயர் குடிபற்றி வந்ததன்று; இவர்க்கு இது வண்மை பற்றி வந்தது', என்பர். திருக்குறள் என்னும் அரிய பெரிய நூல், குறள் வெண்பாக்களாற் செய்யப் பெற்றமையின் அப்பெயர் பெற்றது.

திருக்குறள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கினையும் அறத்துப்பால், பொருட் பால், காமத்துப்பால் என்னும் மூன்று பிரிவால் விளக்கு வது. இது தமிழர்க்குச் சிறந்த திருமறையாகக் கருதப்

படுவது இந்நூலில் கூறப்பெறும் பொருள்கள், பல தேசத்தாரும் பல சமயத்தாரும் போற்றிக்கொள்ளற் குரியனவாக இருத்தலான், இந்நூல் பிற நாட்டு மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பெற்றிருக்கிறது.

1. கல்வி

1. கசடற—குற்றமின்றி; கற்பவை—கற்க வேண்டிய நூல்களை; அதற்குத்தக நிற்க—கற்ற நெறிக்குத் தகுந்தவாறு நல்லொழுக்கத்தில் நிலைத்து நிற்கக் கடவர்.

2. எண்—கணிதம், இலக்கணம்; எழுத்து—இலக்கியம் (நூல்கள்)

4. உவப்ப—மகிழுமாறு; தலைக்கூடி — ஒன்றாகச் சேர்ந்திருந்து; உள்ளப்பிரிதல்—என்று இவரைக் காண்போம் என்று கருதும்படி பிரிவது, ஒருவரையொருவர் நினைத்துக்கொண்டிருக்குமாறு; புலவர் — கற்றோர்; தொழில்—இயல்பு.

5. உடையார்முன் — செல்வம் உடையவர்கள் முன்னிலையில்; இல்லார்போல் — வறுமையுடையோர் போலத் தாழ்ந்து; ஏக்கற்றும் — ஏங்கி நின்றுவது; கற்றார் — கற்றவர்களே உண்மையாக உயர்ந்தோராவர்; கல்லாதவர் கடையரே—அவ்வாறு கல்லாதவர்கள் கீழ்ப் பட்டவர் ஆவர்.

6. தொட்டனைத்து — தோண்டிய அளவுக்கு; கேணி—கிணறு; ஊறும்—ஊற்றுப் பெருக்கைத் தரும்; (அதுபோல.)

7. யாதானும்—எந்த நாடாயினும்; நாடாம்—சொந்த நாடாகும்; சாந்துணையும்—சாகும் வரையிலும்; கல்லாதவாறு என்-படிக்காதிருப்பது எக்காரணம்பற்றி?

8. ஒருமை—ஒரு பிறப்பு; எழுமையும் — தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் ஏழு பிறப்புகளிலும், ஏமாப்பு—பாதுகாவல் (துணை)

9. தாமின்புறுவது—தாங்கள் கல்வியால் இன்ப மடைவதற்கு; உலகு—உலகில் உள்ள பிற மக்களும்; காமுறுவர்—விரும்புவர்.

10. கேடில் — அழியாத; விழு — சிறந்த; மாடு அல்ல—பொருளல்ல.

## அடக்கமுடைமை

1. அமரருள்—தேவலோகத்தில்; உய்க்கும்—நம்மைச் செலுத்தும்; ஆரிருள்—மிக இருண்ட நகரம்.

2. பொருளா—சிறந்த பொருளாகக் கருதி; ஊங்கில்லை—மேலானது இல்லை.

3. செறிவறிந்து—நமது அறிவு நிறைவு பிறரால் அறியப்பட்டு; சீர்மை—புகழ்; அறிவறிந்து — அறிய வேண்டுவனவற்றையறிந்து; ஆற்றின்-தக்கநெறிப்படி.

4. நிலையில்—தனது நிலைக்கேற்ப; திரியாது—மாறுபடாமல்; அடங்கியான் — அடங்கியிருப்பவன்; மாண—மாட்சிமைப்பட.

5. செல்வம் தகைத்து—மற்றொரு செல்வமாம் தன்மையுடையது.

6. ஒருமை—ஒரு பிறப்பு; ஐந்தடக்கல்—ஐந்து புலன்களையும் அடக்குதல்; ஆற்றின் — செய்தால்; எழுமை—எழுவகைப் பிறவிகள்.

7. யாகாவாராயினும்—எப்பொருளைக் காவாவிடினும்; நா காக்க—நா ஒன்றினைமட்டும் காக்கக்கடவர்; சோகாப்பர்—துன்புறுவர்;சொல்லிழுக்குப்பட்டு—சொற்குற்றம் உண்டாகி.

## ஒழுக்கமுடைமை

1. விழுப்பம்—சிறப்பு; உயிரினும்—உயிரைவிட மேலாக; ஓம்பப்படும்—பாதுகாக்கப்படும்.

2. பரிந்தோம்பிக் காக்க—வருந்தியும் நன்கு பாதுகாக்க; தெரிந்தோம்பி — ஆராய்ந்து பார்த்து; தேரினும்—அறிந்தாலும்.

3. குடிமை உயர்குடிப் பிறப்பாகக் கருதப்படும்; இழுக்கம்—அவ்வொழுக்கத்தினின்று தவறுதல்.

4. அழுக்காறு—பொறாமை; ஆக்கம் போன்று—செல்வமில்லாதிருப்பது போன்று.

5. எய்தா—அடையத்தகாத.

6. நன்றிக்கு—நற்செயல்களுக்கு; இடும்பை—துன்பம்.

7. ஒல்லா—பொருந்தா; வழுக்கியும்—தவறியும்

8. உலகம்—பெரியோர்; ஒட்ட—பொருந்துமாறு கல்லார்—அறியாதவர்கள்; பல கற்றும்—பல நூல்களைக் கற்றிருந்தும் (உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார், பல கற்றும், அறிவில்லாதார் என்று கூட்டிப் பொருள் கொள்க.)

## (iii) நாலடியார்

இது சங்கமருவிய பதினென் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகும். பல ஜைன முனிவர்கள் பாடிய வெண்பாக்களினின்றும் தெரிந்தெடுக்க நானூறு வெண்பாக்களைக் கொண்ட ஒரு நீதிநூல். அதனால் இது நாலடி நானூறு என்றும் பெயர் பெறும். இந்நூலுக்குத் திருக்குறள்போல, பால் இயல் அதிகாரப் பகுப்புமுறை செய்து உரையும் செய்தவர் பதுமனூர் என்னும் ஜைனப் புலவர். "ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி", என்று வழங்கும் பழமொழியே இந்நூற் பெருமையை விளக்கும். இந்நூலிற் கூறப்படும் நீதிகள் எல்லா மதத்தினர்க்கும் சாதியார்க்கும் ஒத்தன.

1. அங்கணநீர்—சலதாரை நீர்; உரவு நீர்—நல்ல நீருள்; (ஒரும்—அசை); குலமாட்சி — குலத்தால் பெருமை; குன்றுபோல்—மலைபோல் உயர்ந்து பெருமை பெற்று.

2. கூர்ந்து—சினம் மிகுந்து; பேர்த்து—மீண்டும்; நீர்த்தன்றி—தகாதவாறு; கீழாய—இழிவானசொற்களை.

3. கேண்மை—நட்பு; பிறை—வளர்பிறை; வரிசை வரிசையா—படிப்படியாக; நந்தும் வளரும்; வானூர்-ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற; மதியம்—சந்திரன்; வைகலும்—தினந்தோறும்; தொடர்பு—நட்பு.

## (iii) சிறுபஞ்சமூலம்

இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று இதைப் பாடியவர் காரியாசான் என்பவர். ஐந்து மூலிகைகளின் வேர்கள் உடல் நோயை அகற்றுவது போல இந்நூலில் கூறப்பட்டுள்ள பொருள்கள் அறியாமையாகிய நோயை அகற்றி அறிவை உண்டாக்குமென்ற காரணத்தால், இதற்கு இப்பெயர் வந்தது.

1. இல்—வீடு, குடி: தன்னை—தனது ஒழுக்கத்தை; கருதற்பாடு உயர்வாகக் கருதப்படுவதை; சாக என—சாகவேண்டுமென்று சொல்லுமாறு; வாழான்—வாழாமல்; ஆக—நீடு வாழ்க.

2. தேருங்கால்—ஆராயுமிடத்து; பூதரே—பூதங்கள்; முன்—முன்பே; ஆதர்—வீணர்; இலேம்—(நாம்) இல்லாதவர்கள்; பண்டு—முன்பு; வனப்பு—அழகு; இருகால் எருது—இரண்டு கால்களையுடைய எருது போன்றவர்.

## (iv) சதகம்

இது நூறு செய்யுட்களையுடைய ஒரு நூல். தண்டலையார்சதகம்—தண்டலை நீள்நெறி என்ற சிவதலத்தில் உள்ள இறைவன்மீது பாடப்பட்ட நூல்; இதைப் பாடியவர் சாந்தலிங்கக் கவிராயர் என்பவர்.

ஆயிரம்—ஆயிரக்கணக்கான நல்ல சொற்கள்; துடுக்கே—கெட்ட செயலே; தழும்பா—தழும்புபோல மறவாமல்; பதமேயான—பக்குவமான.

**திருவேங்கட சதகம்:**—திருப்பதியில் உள்ள வேங்கடாசலபதிமீது பாடப்பட்ட நூல். இதைப் பாடியவர் மணவாள நாராயணன் என்பவர்.

முனிதல்—கோபித்தல்; உற்றவர்—நெருங்கியவர்; விக்கிரமாதித்தன்—வெற்றி பொருந்திய வடநாட்டரசன் ஒருவன்; அலர்மேலுமங்கை—திருமகளைக் குறிக்கும் தொடர் (அலர்-தாமரை மலர்; மணவாளன்—கணவன்; வரதனே—வரங்களைத் தருகிறவனே.

---

# கதைப் பகுதி

## நைடதம்

### *(கலி நீங்குதல்)*

(தமயந்தியின் தந்தையாகிய வீமன் ஓர் அந்தணன் மூலம் நளனுக்குச் செய்தி அனுப்புதல்.)

1. "நாட்டம் மூன்றுடை நாயகன் வரத்தினுல் நங்கை
 மீட்டும கன்னிகை ஆயினள்; சுயவரம் விழைந்தாள்;
 கேட்டு மாநிலக் கிழவரும் அவ்வழி இறுத்தார்;
 பூட்டு வார்சிலை மன்ன நீ, போதியேல் போவாய்.

2. "நாளை நன்மணம் புணர்வது; நிடதநா டளிக்கும்
 காளை ஆருயிர் உளன்கொலோ? கழிந்தனன் கொல்லோ?
 ஆளி மொய்ம்பினய் என்றுநீ அறை"யென அறைந்தாள்,
 வாளை வென்றரி பரந்துமைதோய்ந்தகண் மடவாள்.

(பிராமணன் போய் அவ்விதமே இருதுபன்னனுக்குத் தெரிவிக்க, அவன் வாகுகனை அழைத்து, "நாளைப் பொழுதில் தமயந்தி சுயம்வரமாம்; அங்கு நாம் செல்ல நீ விரைவாகத் தேர் செலுத்த வேண்டும்" என்று கட்டளையிட்டான்.)

3. கேட்ட வாகுகன் "கிளியென மிழற்றுதீங் கிளவி,
காட்டில் நீத்தது நினைந்தன ளாயினும், கற்பு
நாட்டு கின்றவள் இத்திறம் புரியுமோ? நம்மைக்
கூட்டு தற்கிஃதிழைத்தன ளாம்'' எனக் குறித்தான்.

(வாகுகன் தேரைச் சித்தம் பண்ணி விரைவாகச்
செலுத்தினன்: அத்திறத்தைக் கண்டு)

4. 'கூந்தல் மாவுளம் அறிதலின் சாலிகோத் திரனோ?
ஆய்ந்த கேள்வியின் மாதலி யோ? அன்றி நளனும்
ஏந்தல் வேற்றுரு எடுத்தன னோ?'' என எண்ணி
வேந்தர் வேந்தனும் மணிமுடி துளக்கினன்
வியந்தான்.

5. முத்த வெண்குடை வேந்தர்கோன், முழவுறழ்
தடந்தோள்
உத்த ரீயம்அந் நெறியிடை வீழ்தலும் உணர்ந்து,
"தத்து வாம்பரி நிறுவிஅத் துகில்தரு'' கென்னப்
"பத்துயோசனை கடந்தது தேர்'' எனப் பகர்ந்தான்.

(சில காதம் சென்றபின் வழியில் ஒரு தான்றி
மரத்தைக் கண்டான் இருதுபன்னன்.)

6. தான்றி மாமரம் தோன்றலும் தேரினைத் தகைத்துத்
'தோன்றும் இம்மரத் திலைகளும் தொக்கமென்
பழனும்
மூன்று கோடியே முப்பதிற் றிரண்டென மொழிய
ஆன்ற கேள்வியோன் எண்ணிஅற் றும்என வியந்
தான்.

[நளனும் வாகுகன் கூறல்]

7. "இனிய விஞ்சைமற்றெனக்குநீ அளித்தனை யென்னில்
துணைவ யப்பரி உளமுணர் விஞ்சையான் சொல்வன்
வணைபொ லன்கழல் மணிமுடி மன்ன," என்றுரைப்ப
அனைய விஞ்சையை வாகுகற் களித்தனன் அன்றே.

[கலி நளனை விட்டு நீங்குதல்]

8. இருது பன்னன் அவ் விஞ்சையை வாகுகற் கீய
மருவி நின்றவன் கலிதணந் தேகிவா ளரவம்
எரிசெய் யெவ்விடம் கான்றவின் இதயமநெக் குருகி
வெருவிவாய்விடாவிடத்தினை உமிழ்ந்தனன் அன்றே

[நளன் கலியைச் சபிக்கக் கருத, கலி இரங்கி வேண்டுதல்.]

9. தணந்த வெந்திறல் கலியினைச் சபிக்குவன் என்னுக்
கணங்கொள் வண்டிமிர் தாரினான் உளத்திடைக் கருதல்
உணர்ந்த வெங்கலி "தமயந்தி உரைத்தசா பத்தால்
அணங்கரா உமிழ் விடத்தினால் இன்றனவயர்ந்தேன்.

10. 'இழைத்த தீவினை தணந்தனென்; இன்று தொட்டுன்பேர்
வழுத்தி னுரையும் மருவலன் மன்ன,' என் றேத்த
அழற்கொ டுஞ்சினந் தணிந்தனன், ஆடல்வேல் அரசன்
குழைத்த தான்றியில் ஏறினன் கொடியவெங் கலியே.

[நளன் தமயந்தியைக் கண்டது; அப்பால் தேர் குண்டினபுரம் குறுகியது.]

11. சில்லி யந்தடந் தேர்வரு கம்பலை கேளா,
'ஒல்லை யித்திறந் தேர்விட நளன்அலா தொருவர்
வல்ல ரோ?' என மனத்திடை எண்ணிமற்
'றணையோன்
அல்ல னேல்உயிர் துறப்பான்'என் றுன்னினள்
அணங்கே.

(தன்னை வந்து கண்ட இருதுபன்னனை வீமராசன் "வந்த காரியம் என்ன?" என்று வினவ, 'உன்னைக்காண் பதே'' என்று சொல்லி, இருதுபன்னன் தனக்கு அமைத்த விடுதியிற்சென்று,"சுயம்வரம் இல்லை போலும்! என்ன காரணம்?'' என ஐயுற்றிருந்தான்.

தமயந்தி தன் தோழியை அழைத்து, "இப்போது வந்த தேரின் பாகன் நளனோ என்று தெரிந்துவா,'' என்று கட்டளையிட்டாள். அவள் அங்ஙனமே போய்ப் பலவாறு உசாவி, நளன்றானே எனச் சோதித்துத் திரும்பி வந்து, 'உருவளவில் வேறு; மற்றெல்லாம் நளனே போல்கின்றான்' என்று சொன்னாள். அதன்மேல் தமயந்தி, மக்களை அப்பாகனிடம் அனுப்பினாள்.)

12. அடைந்த மக்களைக் காண்டலும் அழலிடு மெழுகின்
உடைந்த துள்ளம்; நீர் ஊற்றிருந் தொழுகின
நெடுங்கண்;
தொடர்ந்த மும்மலம் முருக்கிவெம் பவக்கடல்
தொலையக்
கடந்துளோர்களும் கடப்பரோ மக்கள்மேற் காதல்?

(இவ்வாறு நளன் மக்களைக்கண்டு மனமுருகிய செய்தியைத் தோழியால் அறிந்த தமயந்தி, பாகன் தன் கணவனே என நிச்சயித்துத் தாய் தந்தையரிடம் அதனைத் தெரிவித்தாள். வீமராசனது கட்டளையால் ஒரு தோழிபோய்ப் பாகனை அழைத்துவந்தாள். தமந்தி, ''காட்டில் மனைவியை மனமொப்பி நள்ளிரவில் விட்டுப் பிரிபவர் நளனன்றி உலகில் ஒருவர் உளரோ?'' என்றாள்.

வாகுகன் "கலியின் வசத்தனுயிருக்கையில் நளன் உன்னை விட்டுப் பிரிந்தான்; கலி அவனை விட்டு நீங்கிய பின் உன்னை எண்ணி நண்ணி வந்தான். நீ இரண்டாம் சுயம்வரம் விரும்பியது எதுபற்றி?'' என்றான். தமயந்தி "நளன் அயோத்தியில் இருப்பதை அறிந்து அவன் விரைவில் என்னிடம் வருவது கருதியே இந்த உபாயத்தைக் கடைப்பிடித்தேன். இதனை வேறாகக் கருதிச் சந்தேகிக்க வேண்டா. உனது பழைய உருவத்தைக் காட்டுக,'' என்று வேண்டினாள். நளன், நாகம் கொடுத்த வஸ்திரங்களை உடுக்கவும் முன்னைய உருவம் அடைந்து விளங்கினான். இவற்றைக் கேள்வியுற்று வீமராசன் வந்து நளனைப் பார்த்தான்.

13. அன்னை காலையில் அகலிரு விசும்பிலோர் வாணி,
"மன்ன கேட்டி: இம் மடவரல் தன்னைமூ வாண்டும்
இன்ன லின்றியாம் அளித்தனம்; சுயம்வர மென்று
உன்னை இவ்வுழிக் கூட்டுதற்(கு) ஒண்டொடி
இழைத்தாள்.

14. "வடபு லத்தினில் நோக்குநர் மாசற விளங்கும்
கடவுள் மீனினும் தொழுதகு கற்பினுக் கரசாம்
நிடதர் கோமகன் மகிழ்வுற நிகழ்ந்ததை யன்றே.

15. தமர வேலையின் அந்தர துந்துபி தழங்க
அமரர் யாவரும் பூமழை பொழிந்துநின் றார்த்தார்;
உமிழ்செ ழுங்கதிர் மணிமுடி வீமனும் உவந்தான்;
குமரன் அன்னவன் கோல்வளைத் தோளியை
அடைந்தான்.

16. மண்க ளித்த, மாதிரம் களித்தன, மலர்மேல்
பெண்க ளித்தனள், பேரறம் களித்தன, கண்டோா

கண்க ளித்தன, களித்தது வீமன்மா நகரம்.
விண்க ளித்தன, களித்தது வீமன்மா நகரம்.

(அப்பால் வாகுகனுயிருந்தவன் நளன் என்பதை அறிந்த இருதுபன்னன், "உன்னை அறியாமல் யான் செய்த தவறுகளைப் பொறுத்தருள்க!" என்று தொழு தான். நளன் அவனைத் தழுவி இன்சொற்கூறி விடை கொடுத்தான்)

—அதிவீரராமபாண்டியன்

## குறிப்புரை

### 3. நைடதம்

நிடத தேசத்து அரசனுன நளனது சரித்திரத்தைக் கூறுதலால், இஃது இப்பெயர் பெற்றது; நைஷதம் என்னும் வடமொழிப் பெயர் தமிழில் நைடதம் என ஆயிற்று. வடமொழி நைடதத்தையும் தமிழிலுள்ள நளவெண்பாவையும் முதனூலாகக் கொண்டு, இந்நூலை இப்பெயரோடு செய்தவர் அதிவீரராமபாண்டியன் என்னும் இயற்பெயர் வாய்ந்த பாண்டிய மன்னராவார். இவர்க்குச் சீவலன், வரராமன் என்ற பெயர்களும் வழங்கும். இவர் தென்காசியில் இருந்து அரசு செய்தவர். இவர் காலம் சுமார் 400 ஆண்டுகட்கு முற்பட்டது.

1. நாட்டம் - கண்கள்; நாயகன்—சிவபெருமான்; விழைந்தான்—விருப்பினுன்; இறுத்தார் — தங்கினுர்; வார்சிலை—நீண்ட வில்.

2. ஆளி மொய்ம்பு—சிங்க பலம்.

3. மிழற்றும்—பேசும்; தீம் கிளவி—இனியசொல்; நீத்தது—விட்டது.

4. கூந்தல்—பிடரி மயிர்; சாலி கோத்திரன்—ஓர் முனிவன்; மாதலி—இந்திரன் சாரதி; துளக்கினன்—அசைத்தான்.

5. முழவு உறழ்—மத்தளத்தை ஒத்த; உத்தரீயம் —அங்கவஸ்திரம். (மேலாடை)

6. தகைந்து — நிறுத்தி; தொக்க — கூட்டமான அற்று ஆம் - அத்தன்மைத்தாம்.

7. துனே—வேகம்; வ ய ப் ப ரி — வலியகுதிரை அனேய—அத்தன்மைத்தான.

8. மருவி நின்ற—நளனேச்சேர்ந்திருந்த; தணந்து ஏகி—நீங்கிப்போய்; கான்றலின்—சுக்கினமையால்.

9. கணங்கொள்—கூட்டமான; வண்டு இமிர்— வண்டுகள் ஒலிக்கின்ற; திறல்—பலம்; அணங்கு அரா— (விஷத்தால்) துன்பந்தரும் பாம்பு.

10. தீவினே—கொடுஞ்செயல்; வழுத்தினர்—துதித் தார்கள்; ஆடல்—வெற்றி; குழைத்த தளிர்த்த.

11. சி லி—உருளே; கம்பலே—சத்தம்; ஒல்லே— விரைவில்; அணங்கு—தமயந்தி.

12. அழல்—அக்கினி; தொடர்ந்த—அநாதியாகத் தொடர்ந்த; மும்மலம்—ஆணவம், கன்மம், மாயை; முருக்கி — கெடுத்து; பவல்+கடல் — பவக்கடல்—பிற விக்கடல்; காதல்—அன்பு.

13. விசும்பில்—ஆகாயத்தில்; வா ணி—அரசரீரி வாக்கு; இன்னல்—தீங்கு.

14. வடபுலத்தில்—வடதிசையில்; கடவுள் மீன்— தெய்வத்தன்மை பொருந்திய அருந்ததி; கொடி மருங்குல் — வஞ்சிக்கொடி போன்ற இடை; இது உவமைத் தொ கைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்த் தம யந்திக்காயிற்று: நிகழ்ந்ததை — ஐ, அசை; அன்று—அசை.

15. தமரம்—பேரொலி; வேலே—கடல்; அந்தரம்— ஆகாயம்; துந்துபி—தேவர் வாத்தியம்; கோல்— கோலம்; அழகு.

16. மண்—பூமி; பூமியிலுள்ளவர்களேக் குறித்தது (இடவாகு பெயர்); மாதிரம்—திசை (ஆகு பெயர்)· பெண் — இலக்குமி.

# 4. பல்சுவைப் பகுதி

## 1. திருக்குறளின் பெருமை

சிந்தைக் கினிய; செவிக்கினிய; வாய்க்கினிய;
வந்த இருவினைக்கு மாமருந்து;—முந்திய
நன்னெறி நாம் அறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன் குறள்வெண் பா.

கவுணியனார்

## 2. பயனற்றவை இவை

மாடில்லான் வாழ்வு மதியில்லான் வாணிபம் நன்
னுடில்லான் செங்கோல் நடாத்துவது கூடும்
குருவில்லான் வித்தை குணமில்லாப் பெண்டு
விருந்தில்லா வீடு விழல்.

—ஔவையார்

## 3. திருமண விருந்து

வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்(து)
உண்ட பெருக்கம் உரைக்கக்கேள்;—அண்டி
நெருக்குண்டேன் தள்ளுண்டேன், நீள்பசியி னலே
சுருக்குண்டேன், சோறுண் டிலேன்.

—ஔவையார்

## 4. உண்மைப் பெருமை எது?

மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ?
காற்றும் சிலரை நீக்கி வீசுமோ
மா நிலம் சுமக்க மாட்டேன் என்னுமோ

திருவும் வறுமையும் செய்தவப் பேறும்
சாவதும் வேறுஇலை தரணி யோர்க்கே;
குலமும் ஒன்றே; குடியும் ஒன்றே;
வழிபடு தெய்வமும் ஒன்றே; ஆதலால்,
முன்னோர் உரைத்த மொழி தவறாமல்
எந்நாள் ஆயினும் இரப்பவர்க்கு இட்டுப்
புலையும் கொலையும் களவும் தவிர்த்து
நிலைபெற அறத்தல் நிற்பதை அறிந்து,
ஆணும் பெண்ணும் அல்லதை உணர்ந்து,
பேணி உரைப்பது பிழைஎனப் படாது:
சிறப்பும் சீலமும் அல்லது
பிறப்புநலம் தருமோ பேதை யீரே!

— கபிலர்



## குறிப்புரை

1. இருவினை - புண்ணிய பாவங்கள்; மா—பெரிய; பன்னிய—சொல்லிய.

2. மதி—அறிவு; கூடும்—அடைந்து கற்றற்குரிய; குணம்—நற்குணம்; விழல்—பயன் அற்றது.

3. வண்தமிழ் — வளமான தமிழ், தேர்ந்த — ஆராய்ந்த. வழுதி — பாண்டியன், பெருக்கம்—மிகுதி. அண்டி — அணுகி; சுருக்குண்டேன் — சுருங்கினேன் (வாடினேன்)

5. மாரி—மழை, வரைந்து—நீக்கி, திரு—செல்வம், வேறு—வெவ்வேருக, இலை—இல்லை, தரணியோர்க்கு —உலகமக்களுக்கு, புலை—கீழான செயல், அல்லதை — அல்லாமல் (வேறு இன்மையை), பேணி—பாதுகாத்து, சீலம்—ஒழுக்கம், பேதையீரே—அறிவில்லாதவர்களே.

